بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

யாகரீம்
இராணிப்பேட்டை
மௌலானா மௌலவி ஹாஜி ஹாபீஸ்
ஆலிமுல் பாளில்

முஹம்மது அப்துல் கரீம் (ரஹ்)
அவர்களின்

ஜீவித சரிதையாகிய

# காமில் வலியின்
# கார்ண காட்சி

ஆக்கியோன் :
**சே. ப. முஹம்மது அலி**
கூத்தாநல்லூர்.
1928

# நூன் முகம்

சாகரத்தால் சூழப்பட்ட வசுந்தரை வதியும் தாவர வர்க்கம். தாதுவர்க்கம், ஜீவவர்க்கம், இவற்றுள் முதன்மை பெற்று மிளிரும் மானிட வகுப்பினர் முக்தி யடைவான் வேண்டித் தன் எல்லையற்ற கருணையைக் கொண்டு நபிமார்களையும், அன்னவர்களுக்குப் பின் வலிமார்களையும், இவ்வுலகிடையே தோன்றச் செய்தவனும் பூரணத் தத்துவங்களை யுடையவனுமாகிய அல்லாஹ் ஜல்லஷானஹூ வதஆலாவுக்கே எல்லாப்புகழும் உண்டாவதாக.

சகோதரர்களே! நாம் இதற்கு முன்பாக சரிதைகளேனும், புராணங்களேனும், அன்றேல் காதைகளேனும் ஆக்கியோமல்லேன். அங்ஙனமிருப்பினும், ஆண்டவன் அடியார்களில் சிறப்புற்ற வலிமார்களைப் புகழுவது பாபங்களுக்குகப்பாறாவாகு மெனக் கூறியுள்ள முது மொழியிலாதரவு பூண்டவனாக ஆரிபுபில்லாஹ் ஆஷிகுற்றஸூல் மாஹிருல் உலூம் பஹ்ருல் ஹகாயிக் ஹாஜியுல் ஹரமைன் ஹாபீஸ் முஹம்மது அப்துல் கரீம் வலியுல்லாஹ் கத்தஸல்லாஹூ சிற்றஹூல் அஜீஸ் அவர்களின் ஜீவித சரிதையை எழுதலானேன். இவண் விளக்கவுள்ள விஷயங்களில் மிகுதம் யாம் அம்மகானவர்களிடமிருந்து நேரில் தெரிந்து கொண்டவைகளும், சில தக்க மனிதர்களிடமிருந்து விளங்கிக் கொண்டவைகளுமாகும். இதற்கு மேல் விரிவாக மதுரஸா அன்னூருல் முஹம்மதிய்யுவின் உபாத்தியாயரோருவரால் அரபி பாஷையால் மவுலூதாகவும் தமிழ் கலை வல்லுனர்களால் பாடல்களாகவும் சொல்லப்பட்டிருப்பதினிமித்தம் மிகு சுருக்கமாகக் கூறியுள்ளேன் னென்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். இப்புத்தகத்தில் எழுத்துப் பிழைகளும், இலக்கண வழுக்கலும், மலிந்து காணப்படலாம் இதனைக் கண்ணுறும் களவான்கள் பிழையை க்ஷமிப்பார்களாக.

தங்களின்,
சே.ப. முஹம்மது அலி
க. கரீமிய்யா சங்க ஊழியன்,

கூத்தாநல்லூர்,
1.12.1928.

## கலீஃபத்துல் காதிரிய்யா, கண்ணியத்திற்குரிய கனம் கோ.மு.அ. முஹம்மது முஹையித்தீன் ஸூஃபி காதிரி அவர்களின்

## புகழுரை

பிஸ்மில்லா ஹிர்ரஹ்மா னிர்ரஹீம்

ஸலாமுன் ஸலாமுன் ஸலாமுன் ஸலாம்
அலா செய்யிதில் அன்பியாயில் கிராம்

புகழனைத்தும் சர்வ வல்லமையுள்ள- தனது பேரருளைப் பொழிந்து கொண்டேயிருக்கும் அல்லாஹுத் தஆலாவுக்குரியது! சர்வலோக ரட்சகர் ஹயாத்துந் நபி ரஸூலே கரீம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அன்னவர்கள் மீதும், அவர்களின் வழித் தோன்றல்கள், சஹாபா பெருமக்கள், வழி வழி வந்த குத்புமார்கள், ஸூஃபிய்யாக்கள், நாதாக்கள், ஷெய்குமார்கள் மீதும் ஸலவாத்தும், ஸலாமும் என்றென்றும் நின்று நிலவுமாக. அதன் பொருட்டால் அல்லாஹுத் தஆலாவின் அருள்மாரியும், அன்னவர்களின் அருளாசியும் நம் அனைவர் மீதும் அளவற்று சொரியக் கடவதாக.

நமது காலத்திலேயே நம் கண்முன் தோன்றி மறைந்த நம் முன்னோர்களும், இன்னும் நாம் சந்தித்துக் கொண்டுமிருக்கும் சான்றோர்களும், பல்லாயிரக்கணக்கான மக்களும் கண்டும் - கேட்டும் அறிந்த இந்த நூற்றாண்டின் காமில் வலி, பொதக்குடி மௌலானா மௌலவி ஹாபிஸ் அல்ஹாஜ் முஹம்மது அப்துல் கரீம் சர்தார் ஹளரத் கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்களின் மகிமையை அறிந்தாவது நற்பயன் அடைந்து புதிய கூட்டத்தை உருவாக்க நினைக்கும் தீயசக்திகளிடமிருந்து விலகி இருக்க வேண்டும் என்ற நல்ல நோக்கத்தை அல்லாஹுத் தஆலா பூர்த்தி செய்து வைப்பானாக.

இந்த பயன்மிக்க நூல் மூலமாவது தற்காலத்தில் தோன்றி யிருக்கும் புதுமை விரும்பிகளும், சமுதாய இளைய தலைமுறை யினரும் உண்மை நிலையின் விளக்கம் பெற்றடைய வேண்டும்.

"சர்தார் ஹளரத்" என்று சிறப்புடன் அழைக்கப் பெறும் காமில் வலி மௌலானா மௌலவி ஹாபிஸ் அல்ஹாஜ் முஹம்மது அப்துல் கரீம் (கத்த) அவர்களின் இச்சிறு நூல், ஹைதராபாத் ஸூஃபி ஹளரத் அவர்களின் கலீபா ஆரிபு பில்லாஹ் சே.ப. முஹம்மது அலி ஸூஃபி (கத்த) அவர்களால் 1928 ல் வெளியிடப்பட்டு ஆயிரக்கணக்கான ஆஷிக்கீன்கள், முஹிப்பீன் கள் நல்லுணர்வு பெற மிகவும் உதவியாயிருந் திருக்கிறது. பின்பு சர்தார் ஹளரத் அவர்களின் மகனார் அவர்களால் 1969-ல் மறுபதிப்பு செய்யப் பட்டு அதேபோல் நம் அனைவருக்கும் நற்பயன் கொடுத்துள்ள. இப்பிரதி இப்போது பெரும்பாலோரிடம் இல்லாததால் இப்போதைய இளைய சமுதாயம் குறிப்பாக ஆன்மீக அறிவு தேட்டமுடையோருக்கு இந்நூல் மிகவும் தேவையான ஒன்று. அல்ஹம்துலில்லாஹ்! தம்பி தா.மு. முஹம்மது ஜமீல் அவர்கள் தமது மகளாரின் மணவிழா சந்தர்ப்பத்தில் இந்நூலை மீண்டும் பதிப்பிப்பதும், தம்பி தோ.அ. ஹாஜி கமருதீன் மதனி அவர்கள் அன்பளிப்பு செய்வதும், மிகவும் போற்றத்தக்க, பயன் தரக்கூடிய முயற்சியாகும். எல்லாம் வல்ல அல்லாஹ் நமது சர்தார் ஹளரத் அவர்களின் பொருட்டைக் கொண்டு, அவரது நல்ல ஹாஜத்துகள் நிறைவு பெற கிருபை செய்யட்டும்.

"காமில் வலியின் காரண காட்சி" எனும் இந்நூலை எத்தனை தடவை படித்தாலும் தெவிட்டாத அமுதமாகவும், கல்புக்கு அருமருந்தாகவும், பக்தி பரவசத்தை உண்டாக்கக் கூடியதாகவும் உள்ளது என்பது அனுபவ உண்மை. சர்தார் ஹளரத் போன்ற வெளிரங்க, அந்தரங்க இல்மு கொடுக்கப்பெற்ற ஞான மஹா புருஷர்களை - நீண்ட காலத்திற்கு ஒருமுறைதான் அல்லாஹ் பூமியில் உண்டாக்குகிறான். அவ்வாறு அடையாளம் காணப்பெற்ற இம்மஹானுடைய சரித்திரம் என்றென்றும் பயன் தரக்கூடியது என்பதில் ஐயம் சிறிதுமில்லை.

சர்தார் ஹளரத் அவர்களும், அவர்களின் ஷெய்கு ஆரிபு பில்லாஹ் ஆஷிக்கிர் ரஸூல் அஹ்மது பதுருதீன் படே ஹளரத் (கத்த) அவர்களும், மெஞ்ஞான ஜோதி ஹைதராபாத் ஸூஃபி நாயகம் முஹம்மது அப்துல் காதிர் ஸூஃபி ஹளரத் (கத்த)

அவர்களுடைய நல்லாசியைப் பெற்று நெல்லிக்குப்பம் வந்து நல்ல விதமாக மத்ரஸாவை நடத்தி வந்து கொண்டிருந்தார்கள்.

தங்களுக்கு ஒரு காமிலான ஷெய்கு கிடைக்க வேண்டு மென்று நினைத்து ஆவல் கொண்டு மிகுதம் பேர்களுக்கு ஊழியம் செய்தும், தங்களுக்குத் திருப்தியான ஷெய்குல் காமில் கிடைக்க வில்லை என்ற இதே கவலையிலும் தேட்டத்திலும் இருந்து கொண் டிருந்தார்கள். அது சமயம் பக்கத்தில் உள்ள மஞ்சக்குப்பத்தில் காமிலான ஒரு பெரியார் இருக்கிறார்கள் என்று தெரிந்து அங்கு சென்றார்கள், அவ்விடம் இருந்து வந்த ஷெய்கு படே சாஹிபு, ஹளரத் (கத்த) அவர்களை முலாகாத்துச் செய்து சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்து வந்துவிட்டார்கள், மறுபடி அடிக்கடி மஞ்சக்குப்பம் போய் வருவதும் இரவுகளில் அங்கேயே தங்கி யிருந்துவிட்டு காலையில் தனது மத்ரஸாவிற்கு வந்து மாணாக்கர் களுக்கு பாடம் கற்பிப்பதும், இரவானதும் மஞ்சக்குப்பம் போவதும் வருவதுமாக சிலகாலம் வரை இப்படியே நடந்து வந்தது. தங்களு டைய மனதிலுண்டான சந்தேகங்கள் எல்லாம் முற்றாகத் தீர்ந்த பிறகு மஞ்சவி நாயகம் ஷெய்கு படே ஹள்ரத்தவர்களை தங்களது ஷெய்காக ஏற்றுக் கொண்டார்கள். (பக்கம் 238, 239)

இத்தகைய சீரும் சிறப்பும் பெற்ற சர்தார் ஹளரத் அவர் களைப் பற்றிய இந்நூலை படித்து நற்பயன் அடைய எல்லாம் வல்ல ரஹ்மான் நம் அனைவருக்கும் நற்கிருபை செய்வானாகவும். இந்த நூல் பதிப்பிக்க காரண கர்த்தாவாகிய ஜனாப். சே.ப. முஹம்மது அலி ஸூஃபி (கத்த) அவர்களின் வாரிசுகளான சே.மு. செய்யது முஹம்மது சே.மு. தாஜ்முகம்மது சகோதரர்களுக்கு நன்றி தெரிவிப் பதுடன் அவர்கள் குடும்பத்தினருக்காக துஆச் செய்வோமாக.

ஆமீன், வஸ்ஸலாம்.

தங்களின்,

கொடிநகர் ஷெய்குனா ஷைகுல் கபீர் அ.த.அப்துல் மஜீது ஸூஃபி அவர்களின் தொண்டூழியன்

**K.M.A. முஹம்மது முஹியத்தீன் காதிரி.**

கூத்தாநல்லூர்

19.9.1997.

# காமில் வலியின் காரண காட்சி

இப்பரந்த உலகினிடையே வசித்துவரும் மக்கள் குழாத்தினிடையில் கீர்த்திவாய்ந்த மகானான ஆரிபுபில்லாஹ் ஆஷிகுற்றஸூல் மாஹிருல்உலூம் மௌலானா மௌலவி ஹாஜி ஹாபிஸ் முஹம்மது அப்துல் கரீம் வலியுல்லாஹ் ரலியல்லாஹ் அன்ஹு அவர்கள் சென்னை மாநகரையடுத்த இராணிப்பேட்டை எனும் செல்வ நகரில் ஹிஜ்ரி 1300ம் வருடம் ரபீஉல் அவ்வல் பிறை 27 திங்கட் கிழமை மாலையில் பிரபல உயர்குலத் துதித்த ஆலி ஜனாப் ஹாஜி ஹாபிஸ் செய்யது முஹம்மது சாகிபவர்களின் செல்வப் புதல்வராக அவதரித்தார்கள்.

இளமைப் பருவத்திலிருந்தே யாதொரு சேஷ்டையையும் பொதிந்தில்லாத சாந்த ஸ்ரூபியாகவும் எக்காரணத்தைக் கொண்டேனும் தமது மாதாபிதாக்களுக்கு யாதொரு கஷ்டத்தையும் உண்டு பண்ணாதவர்களாவும், மானிடர்கள் இச்சிக்கத்தக்க உயரிய விசேஷ குணங்களைப் படைத்தவர்களாக ஆண்டவனின் அருட்கிருபையால் சுக்லபக்ஷத்து சந்திரன்போல் வளர்ந்தேறி வந்தார்கள். சுமார் ஐந்து வயதாகியவுடன் குழந்தையின் அரிய குணத்தையும் அறிவின் விசாலத்தையும் தினமும் கண்டுணர்ந்த அப்பிதாவானவர் தமது அன்பிற்குரிய இவ்விரண்டாவது புதல்வனுக்கு ஆண்டவனின் திருமறையாகிய உயரிய குர்ஆன் ஷரீபை மனனம் செய்துவைத்து விடக் கருதி தாம் ஒரு குர்ஆன் பாராயண போதகாசிரியராக விருந்ததினால் தாமே தினமும் பாடம் கற்பித்து வந்தார். ஹளரத்தவர்களைப் பற்றி அன்னார் கூறியதாவது, "நான் திருமறையைப் பாராயணம் செய்து வைக்கும் ஓர் ஆசிரியனாக விருந்து அனேக சிறுவர்களுக்கு மனனம் செய்து வைத்ததில் எனது புதல்வனாகிய அப்துல் கரீமுக்கு இருந்து வந்த ஞாபக சக்தியைப் போல் எவரிடத்துங்கண்டதில்லை" (என்னே அல்லாஹுத்தஆலாவின் நன்கொடை) இவ்வண்ணம் பாராயணம்

பயின்று வந்ததில் பத்தாவது வயது பூர்த்தியடைவதற்குள் மாபெரும் வேதமாகிய புர்கானுல் மஜீதின் 30 அத்தியாயங் களையும் செவ்வனே பாராயணம் செய்து தேர்ச்சியுற்றார். இவ்வாறு இளமைப் பருவத்திலேயே வல்லுனரென்று புகழ்தற்குறிய பட்ட்த்தை யடைந்திருந்து மார்க்கத்தின் உயரிய தத்துவங்களை நன்குணர்ந்து அதன்படி நடந்து வந்தார்கள்.

தாங்கள் மார்க்கத்தின் கல்வியை கற்றுக்கொள்ள வேண்டுமென்ற அவாவினால் தமது 13வது வயதில் சென்னையைச் சேர்ந்த பெரம்பூரிலுள்ள மதுரஸா ஜமாலியாவின் மாணாக்கனாக பதிவு செய்துகொண்டு சுமார் இரண்டு வருடம் வரை அவ்விடத்தில் கல்வி பயின்று கொண்டிருந்து பின்பு நமது தென்னாட்டின்கண் அரபிக் கல்லூரிகளில் தலைமை பெற்று விளங்கும் வேலூர் பாக்கியாத்துஸ் ஸாலிஹாத்தென்னும் மதுரஸாவில் மாணாக் கனாகச் சேர்ந்து கொண்டு அதன் ஸ்தாபிதகர்த்தாவும் தலைமை ஆசிரியருமாகிய ஆரிபிபுல்லாஹ் ஹாஜி மௌலானாமௌலவி அப்துல்வஹாப் ஹளரத் அவர்களின் உண்மைச் சிஷ்யர்களில் ஒருவராக அமைந்து சுமார் 6 வருடம் வரையில் பலவிதக் கலைகளிலும் தேர்ச்சி பெற்று அன்னவர்களாலேயே மௌலவி என்ற பட்டமும் பெற்றுக்கொண்டு அரபி, பார்ஸி, உருது முதலிய பாஷைகளில் வித்துவானாகவும் ஹகாயிக்குடைய இல்மில் மிகவும் தேர்ச்சி பெற்றவர்களாகவும் தங்களின் பிறந்த பூமியாகிய இராணிப்பேட்டைக்கு சென்றார்கள். மௌலவி பட்டம் பெற்று சுமார் இரண்டு வருடம் வரை அதனைச் சிந்தனை செய்வதிலேயே ஈடுபட்டிருக்கும்போது சமீபத்திலுள்ள நெல்லிக்குப்பம் என்ற ஊரில் அமைக்கப்பட்ட மதுரசாவுக்கு போதகாசிரியராக விருக்கும்படி தமது குருவாகிய வேலூர் பெரிய ஹளரத்தவர்களால் செய்யப்பட்ட உத்திரவுக் கிசைந்து அவ்வண்ணமே அம் மதுரஸாவின் தலைமைப் பதவியை ஏற்றுக்கொண்டார்கள். தங்களால் ஒப்புக்கொள்ளப்பட்ட வேலைக்கு எவ்வித இழுக்கும் ஏற்படாவண்ணம் சுமார் இரண்டு வருடம் வரை செவ்வனே நடத்தி வருங்காலையில் இஸ்லாத்தின் ஐந்தாவது கடமையாகிய ஹஜ்ஜு செய்தலென்னும் திருமக்கா யாத்திரை சென்றுவர வேண்டுமென்ற

அவா மேலீட்டால் அவ்வருடமே பிரயாணப்பட்டு ஆண்டவன் அனுக்கிரகத்தால் யாதொரு குறைவுமின்றி ஆங்கு நிகழ்த்த வேண்டிய கிரியைகளை முடித்துக்கொண்டு அளவற்ற சந்தோஷத்துடன் இவ்விந்திய தேசம் திரும்பினார்கள். அவ்வாறு மீண்டபின்னும் சிறிது காலம் அம்மதுரஸாவிலேயே தலைமை ஸ்தானம் வகித்து வந்தார்கள். அவ்வாறிருந்து வருங்காலை ஆத்மாவின் முக்திக்குரிய மஃரிபத்தின் இல்மை அறியவேண்டி இத் தென்னிந்தியாவின் பல பாகங்களிலுமுள்ள அறிஞர்களிடம் செல்பவர்களாயிருந்தார்கள்.

பற்பல வழிகளையுடைய ஞானவான்களிடம் சம்பந்தும் வைத்தும் தங்களுக்கேற்பட்டிருந்த சந்தேகங்கள் நிவர்த்தியின் மையால் எல்லாம் வல்ல அல்லாஹ் ஜல்லஷானுஹூ வ்தஆலாவினிடத்தில் குறையிரந்தவர்களாக விருக்குங்காலை ஆண்டவன் தன் அனுக்கிரகத்தால் உதவி புரியலானான், (என்னே தன்மீது காதல் பூண்ட பக்தர்கள்பால் ஆண்டவன் செலுத்தும் கிருபை). அரபிக் கல்வி பயிலாமலும் உலகிலுள்ள எந்த ஆசானிடமும் ஞானோபதேசம் பெறாமலுமிருந்தும் ஆண்டவனுடைய ஞானத்தை சப்தமேகங்களும் ஒன்று சேர்ந்து மழை பொழியுமாப்போல் மனித கோடிகளின் முன்னிலையில் ஞானவழியை மொழியக்கூடிய வல்லமை பெற்ற மெஞ்ஞான ஸ்ரூபி ஆஷிகுற்றசூல் ஷெய்கு பத்ருதீன் படே ஹளரத்தவர்களின் இருப்பிடமாகிய மஞ்சக் குப்பம் சென்று அவர்களிடம் சிஷ்யரானார்கள். அது முதல் தங்களுக் கேற்படும் எக்காரியங் களையும் அன்னவர்களின் அனுமதியைக் கொண்டே நடத்தாட்டு பவர்களாக விருந்தார்களென்று சொல்வது மிகையாகாது. இவ்வாறிருந்து வருங்காலை தஞ்சை ஜில்லா புதக்குடியில் அவ்வூர் தனவந்தரான கனம் ஹாஜி. பொ.செ.பக்கீர் முஹம்மது ராவுத்தர் அவர்களால் அன்னூருல் முஹம்மதிய்யு வென நாமம் சூட்டப்பட்ட ஓர் உயர்தர அரபிக்கலாசாலை ஒன்றை ஸ்தாபிதம் செய்வதற்கான முடிவு கட்டி அதனை நடாத்தும் வல்லுனரான தலைவர் கிட்டாமல் ஆராய்ந்திருக்குங்காலை ஹளரத்தவர்களின் கீர்த்தியையும் இல்மின் வன்மையையும் புகழ்த்தற்குரிய

குணவிசேஷத்தையும் செவியுற்று உடனே அவர்களை நேரில் கண்டு அழைத்து வந்தார்கள். ஹளரத்தவர்கள் புதக்குடி நகருக்கு விஜயம் செய்த காலை எமதூராகிய கூத்தாநல்லூரும் அன்னவர்களின் பாதாரவிந்தம் படக்கூடிய பாக்கியத்தைப் பெற்றிருந்தது.

மதுரஸா அன்னூருல் முஹம்மதிய்யுவை ஹிஜ்ரி 1333 வது ஆண்டில் ஸ்தாபிதம் செய்து ஆரம்ப காலத்திலேயே சற்றேரக்குறைய 60 மாணவர்களை உடையதாக நடந்தேறி வந்தது. அது முதல் எமதூராகிய கூத்தாநல்லூருக்கும் வருடம் இருமுறையேனும் விஜயம் தந்து மானிடர்கள் முக்தியடைக்கூடிய அரிய உபதேசங்கள் நடத்தி வந்ததுடன் ஹிஜ்ரி 1338வது ஆண்டில் அன்னவர்களால் கருணை பெறவழைக்கும் கரீமிய்யா சங்கமென பிரதி மாதங்களிலும் 13,14,15 தேதிகளில் உபதேசம் புரியக்கூடிய சங்கமொன்றும் ஸ்தாபிதம் செய்யப்பட்டது. ஹளரத்தவர்களின் ஜீவிய கால பரியந்தம் இச்சங்கத்தின் நோக்கப்படி பயான்கள் நடத்திவந்ததுடன் இச்சங்கத்தினரால் உபதேசரெத்தினமென நாமம் சூட்டப்பட்ட சில உபதேசக் காப்பிகளும் அச்சிட்டு பொது ஜன நன்மையைகருதி விலையில்லாமல் வழங்கப்பட்டது. ஹிஜ்ரி 1340வது ஆண்டில் ஹளரத் அவர்கள் பெருந் திரளுடன் இரண்டாவது தடவையாக ஹஜ்ஜுக்குச் சென்று ஆண்டவன் கிருபையால் சுகமே மீண்டார்கள். இம்மட்டோடு இதனை முடித்து விட்டு ஜீவிய காலத்தில் ஹளரத்தவர்களிடம் காணப்பட்ட அரிய தன்மைகளில் சிலவற்றை விளக்குகிறேன்.

## கொடையளித்த தன்மை

ஹளரத்தவர்கள் மானிடர்களின்மீது அளவற்ற பேரலாவுடையவர்கள் எதுவரையெனில் பசியின் பிணியால் துன்புறும் மனிதனின் பசியை தணிக்காத வரையில் தாங்கள் உணவருந்தார்கள். பொருளில்லாக் குறைவால் கஷ்டப்படுபவர்களுக்கு தங்களிடமிருக்கும் பெரிய துகையாகட்டும் சிறிய துகையாகட்டும் தங்களுக்காக சிறு பைசா வரையிலாவது வைத்துக்

கொள்ளாமல் கொடுத்து விடுவார்கள். தங்கள் வசம் பொருளில்லா விட்டால் பிறரிடம் கடன் வாங்கியும் கொடுப்பார்கள். அதற்குமி யலாவிடில் அன்னவரை அழைத்துக்கொண்டு வெளிக்கிளம்பி யாரிடத்திலாவது உபகாரம் செய்யும்படி கேட்டு அன்னவரின் கஷ்டத்தை போக்குவார்கள். அணியக்கூடிய சாமான்களில் தாங்கள் அணிந்திருப்பவைகளைத் தவிர்த்து மற்றவைகளில் எதையெதை எவர் விரும்புவாரோ அவரளவிலதை சேர்ந்து விடுவார்கள்.

சில சமயங்களில் மாற்றுதனுக்கு கைலியில்லாமல் தாங்களணிந்திருந்த கைலியை துவைத்தபின் அவை உலரும் வரை மேல்வேட்டியை கட்டிக் கொள்பவர்களாகவும் இருந்திருக் கிறார்கள். இவ்விதமான செய்கைகள் ஓர் கஷ்டத்தை மனதுக்கு உண்டு பண்ணக்கூடியதாக விருக்கிறதேயென வினவியபோது பதிலுரைத்ததாவது நாம் இவ்வுலகத்தில் தரிபட்டிருப்பதற்காக வந்தவனல்ல மேலும் வழிப் போக்கர்கள் சத்திரங்களில் தங்கி யிருப்பதுபோல் நாமும் இவ்வுலகில் தங்கியுள்ளோ மாகையால் நீண்டகாலம் தரிபட்டிராத நமக்கு எது தேவைப்படுமென்றார்கள். மேலும் சென்ற காரியங்களைப்பற்றி துக்கமும், வருங்காலத்தைப் பற்றிய கவலையும் உடையவன் ஆண்டவனை அறியாதவ னென்றும் அவனே ஆண்டவன்மீது காதல் கொள்ளாதவனென்றும், அவனே துனியாவைச் சேர்ந்தவனென்றும் பதிலுரைத்தவர் களாகவே விருந்தர்கள். ஹளரத்தவர்கள் மக்காவுக்குச் சென்றிருந்த இரு தடவைகளிலும் அவ்விடமுள்ள பதவிகளால் (ஸஹிி மௌலானா) கொடையளிக்கும் மௌலானா வென நாமம் சூட்டப்பட்டிருந்த தென்றால் வேறு என்னதான் எழுதவேண்டும்.

## உலகப் பற்றை நீக்கிய தன்மை

சுப்ஹானல்லாஹ்! இவ்விஷயத்தில் ஹளரத்தவர்களின் பூரா விபரத்தையுமெழுத யாம் வல்லமையற்றவனாக விருப்பதுடன் எழுதுகோலும் அயர்ந்து போகக்கூடியதாக விருப்பதை நினைத்து சிலவற்றை மட்டில் குறிப்பிடுகிறேன்.

இதைக் கண்ணுறும் எமது சகோதரர்கள் தங்களாலியன்றவளவு இதன்படி நடக்க முற்படுவார்களானால் ஒளி மங்கலாகத்தோணும் இஸ்லாமிய ஜோதியானது தன் முழுப் பிரகாசத்தையும் உலகில் பிரகாசிக்கச் செய்யுமன்றோ? சற்றேரக்குறைய 12 வருடம் வரை யாம் அவர்களோடு நெருங்கிய சம்பந்தம் வைத்திருந்த வரை எமக்கு விளங்கியதாவது ஹளரத்தவர்களின் பார்வையிலாவது எண்ணங்களிலாவது நடைகளிலாவது. இவ்வுலகில் ஈடுபட்டிருந் தார்களென்று எழுத வியலவில்லை. மேலும் தங்களின் அருமை புத்திரர்களின் விஷயங்களில் ஹளரத்தவர்கள் நடந்து காண்பித்ததில் சிலவற்றை விபரிக்கின்றேன். தங்களுக்கு ஏக புத்திரியாக விருந்த சுமார் நான்கு வயதுள்ள பெண் குழந்தை ஒன்று இராணிப்பேட்டையில் வைசூரி கண்டு கஷ்டப்படுவதாகவும் தாங்கள் வந்து சேரவேண்டுமென்றும், தபால் கிடைக்கப் பெற்ற உடனே இக்கடிதத்துடன் ரூ.25 மணியார்டரில் வருகிறது ஒப்புக்கொண்டு பிள்ளை ஹயாத்துடனிருந்தால் கொண்டு வந்து சேரவும் இன்றேல் இறந்து போய்விட்டால் எடுத்து அடக்கம் செய்துவிட்டு மீதியுள்ளவர்கள் வந்து சேரவும் என பதில் எழுதி அனுப்பினார்கள். பிறிதொரு சமயம் உபதேசம் புரிவான் வேண்டி மாலை மணி 6.00க்கு ஹளரத்தவர்கள் எமதூருக்கு விஜயம் செய்தார்கள். அதே இரவு மணி 8.00க்கு புதக்குடியிலிருந்து ஹளரத்தவர்களுக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்திருப்பதாக தூது வந்தது. அது சமயம் பயான் 3 நாள் வரையில் நடை பெற்றதால் எமதூரிலேயே தங்கியிருந்தார்கள். மூன்றாவது நாள் காலையில் பிரயாணப்பட்டு புதக்குடிக்குச் சென்றார்கள் அடுத்து மூன்று நாள் கழித்து யாமும் எமது சகாக்களுமாக ஹளரத்தவர்களின் முலாகாத்துக்காகச் சென்றோம் மிகுதமாக ஹளரத்தவர்கள் மதுரசாவிலேயே தங்கியிருப்பவர்களாக விருப்பார்கள் அதனால் நாங்கள் மதுரசாவிற்கே சென்றோம், ஹளரத்தவர்களைக் காணாது விசாரணை செய்ததில் சுமார் அரைமணி நேரத்திற்கு முன்பாகத் தான் வீட்டிற்குப் போனார்களென பதில் கிடைத்தது. நாங்கள் வந்திருக்கும் விஷயத்தை தெரிவிக்கும்படி செய்தோம் அதே நிமிடத்தில் ஹளரத்தவர்கள் எங்களுக்கு பேட்டி கொடுத்தார்கள்.

குழந்தையின் சௌகரியத்தை விசாரித்ததில் தாங்கள் இன்றுதான் பார்ப்பதற்குச் சென்றதாகவும் சௌகரியமாக விருப்பதாகவும் பதிலுரைத்தார்கள். என்னே ஆச்சரியம்! இதனால் ஹஸரத்தவர்கள் புத்திரர்கள் மீது எவ்வளவு பிரியமுள்ளவர்களாக விருந்தார் களென்பது வாசகர்களே உணரலாம். மேலும் தங்களுக்குப் பிறந்த ஆறு குழந்தைகளையும் பிறந்த விஷயம் அறிந்து பார்க்கச் சென்றால் முதல் முதலில் பிள்ளையை தெற்கு வடக்காய் படுக்கவைத்து இறந்தவர்களுக்காகச் செய்யும் தொழுகையை செய்து முடிப்பார்கள். இதைப்பற்றி வினவுங்கால் இப்பிள்ளை களை இறந்துவிட்டதாகவே பாவித்து வருவதாஃதான் என் மனம் அவர்களை விட்டும் தூரப்பட்டிருக்கிறதென மொழிவார்கள்.

## உணவருந்தும் தன்மை

ஹஸரத்தவர்களிடம் நெருங்கிப் பழகியுள்ளவர்களுக்கு இவ்விஷயம் ஓர் பிரமிப்பை உண்டு பண்ணக் கூடியதாக வேயிருந்தது. ஏனெனில் சூழ்ந்திருப்பவர்களிடத் திலேயே ஒவ்வொரு வேளைகளிலும் நான் சாப்பிட்டேனாவென வினவுவார்கள் பல சமயங்களில் பகல் வேளைக்கு வீட்டிலிருந்து அனுப்பப்பட்ட சாப்பாடு இரவின் வேளைக்கே உபயோகப்படும் இதற்குக் காரணம் யாதெனில் ஆண்டவனைப்பற்றியும், அவனின் உயரிய கலாமைப்பற்றியும் அருமை நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்களைப் பற்றியும், அவர்களின் சிறப்புற்ற திரு வாக்கியங்களைப் பற்றியும் உபதேசம் புரிவதும், சிந்தனை செய்வதும், அதைக் கொண்டு பரவசமுற்று ஏகாந்த நிலையிலாகிவிடுவதுமேயாகும். மேலும் சாப்பாட்டு விஷயங் களில் எவ்வித ருசியும் தேடமாட்டார்கள் சாப்பிடுவதற்கான வஸ்துகளை செப்பம் செய்திருக்கும் சுப்ராவண்டையில் அவர்கள் செல்வதும் திரும்புவதும் அதிசயிக்கத்தக்கதாகவேயிருக்கும்.

# பொருளாசையற்ற தன்மை

ஹளரத்தவர்கள் சிலகாலம் வரை வெள்ளி, செம்பு நோட்டு முதலிய நாணயங்களை கரங்களைக்கொண்டு தொடாதவர்களாக விருந்தார்கள். ஆனால் தாங்கள் இவ்வாறு நடந்து வருவதைப்பற்றி விசாரணை புரிந்தால் சில காரணங்களை முன்னிட்டு இவ்வாறு நடத்தி வருவதாகவும் அவ்வாறு மற்றவர்கள் நடக்க வேண்டுமென்பது அவசியமல்ல வென்றும் பதிலுரைப்பார்கள்.

தங்களுக்குக் கிடைக்கக்கூடிய மாதாந்தரச் சம்பளப் பொருளையும் மற்றவர்களால் அளிக்கப்படும் நன்கொடை பொருள்களனைவற்றையும் தங்களின் இருப்பிடத்திற்கு கீழ் போட்டு வைத்திருப்பவர்களாகவே யிருந்தார்களல்லாது அதைப்பற்றி சிறதளவு சிந்தனையேனும் செய்தவர்களாக காணப்பட்டார் களில்லை. கீழ் குறிப்பிடும் ஹளரத்தவர்களின் வார்த்தையை கொண்டே ஹளரத்தவர்கள் பொருளின் அவாவை விட்டும் எவ்வளவு தூரம் விலகியிருந்தார்களென்பது வாசகர் களுக்கு எளிதில் விளங்கும். பாதுகாப்பில்லாமல் வைக்கப் பட்டிருந்த அவர்களின் துகைகளில் சிலவற்றை அம்மதுரஸா விலுள்ள யாரோ ஒருவரால் இரண்டு மூன்று தடவைகளில் கையாளப்பட்டு விட்டது இது விஷயத்தை ஹளரத்தவர்களின் சிப்பந்தியொருவர் மூன்றாவது தடவையாக அறிவிக்கும்போது யாமும் அவ்விடமிருந்தோம். அதனைக் கேட்ட ஹளரத்தவர்கள் புன் சிரிப்பாகச் சிரித்துக்கொண்டு தேள்வையுடையவர்கள் எடுத்துக் கொண்டால் அதைப்பற்றி என்ன கேள்வியென கேட்டார்கள். அதற்கு அவ்வாறு செய்வது மேலும் மேலும் அவ் வேலையைச் செய்யத் தூண்டியதாக. ஆகுவதால் அன்னவரைக் கண்டு தண்டிக்க வேண்டுமெனக் கேட்டுக்கொண்டதற்கு ஹளரத்தவர்கள் கூறியதாவது எனக்குச் சொந்தமான எப் பொருளையும் எவரொருவர் அனுமதி கொண்டோ அனுமதி யின்றியோ எடுத்துக்கொள்பவரிடம் இவ்வுலகிலும் மறு உலகிலும் யாம் ஆண்டவன் மீது சத்தியமாக வழக்குத் தொடரமாட்டேன் என

உறுதி கூறி இதுவரையில் வருடம் 20க்கு மேல் ஆகிவிட்டது இது வரை அவ்வாறே நடந்துவிட்டேன் இன்றைக்கு அதற்கு மாற்றமாகவா என்னை நடக்கும்படி தூண்டுகிறீர்கள் என்றார்கள் என்னே ஆண்டவனின் உண்மை பக்தர்களின் தன்மை.

## சகிப்புத் தன்மை

ஹளரத்தவர்கள் நெல்லிக்குப்பம் மதுரசாவில் தலைமை ஸ்தானம் வகித்து வருங்கால் அவ்வூரிலுள்ள சில பித் அத்தான காரியங்களை விலக்கியதாலும் அவ்வூரின் தலைவரொருவரிடம் காணப்பட்ட சில தவறுகளை கண்டித்ததாலும் அச்சிலர் ஹளரத்தவர்கள் நம்மிடம் ஊதியம் பெற்றுக்கொண்டு நமக்கு மரியாதை செய்யாமல் நிர்தாக்ஷண்யமாய் நம்மை கண்டிக்க முன் வந்துவிட்டாரே எனச் சினங்கொண்டு ஹளரத்தவர்களை அம்மதுரசாவைவிட்டு விலக்கி விட பலவித முயற்சி செய்தும் ஹளரத்தவர்களும் அவர்களின் சார்வினரும் அதற்குக் கொஞ்சமும் அசைவுறா திருப்பதைக்கண்டு கைச் சண்டையைக் கொண்டேனும் அப்புறப்படுத்தத் துணிந்தனர். அன்னவர்கள் இவ்வாறு எண்ணங்கொண்டு மதுரஸாவை முன்னோக்கி வருவதைத் தெரிந்து கொண்ட ஹளரத்தவர்கள் மாணாக்கர்களை மதுரசாவுக்குள்ளே இருத்திக்கொண்டு மதுரஸாவின் வாசலையும் ஜன்னல்களையும் மூடி விட்டார்கள்.

அதைக்கண்ட எதிரிகள் சில நேரம் வரை செங்கல் மாரிபொழிந்து விட்டு திரும்பலாயினர். அதே சமயத்தில் ஹளரத்தவர்களின் சார்பினர்கள் சமீபத்தில் கூடாரமிட்டிருந்த அத்தாலுக்கா கலெக்டரிடம் விஷயத்தை தெரியப்படுத்தலாயினர். உடனே கலெக்டர் அவர்கள் ஸ்தலத்திற்கே விஜயம் செய்து நடந்தவைகளை நேரில் பார்வையிட்டுக் கொண்டு மேன்மை தங்கிய ஹளரத்தவர்களிடம் நடந்தவைகளைப் பற்றி விசாரணை புரியலானார். அதாவது நான் நேரில் பார்த்துத் தெரிந்து கொண்டவரையில் இவ்வூரார் செய்துள்ள காரியம் மிகத் தவறாகக் காணப்படுகிறது. மேலும் எக்காரணத்தை முன்னிட்டும் ஸ்கூலில்

இவ்வாறு கலகங்களை விளைவிக்க சட்டம் அனுமதியளிக் காதாகையால் இவ்வூரின்கண் தங்களுக்குள்ள பகைவர்களின் பெயர்களை தெரியப்படுத்துவீர்களானால் இதே சமயம் அன்னவர்களை கைது செய்வதற்கு வழி செய்வதாகக் கூறினார். அதற்கு ஹளரத்தவர்கள் பதிலளித்ததாவது "இவ்வூரிலுள்ள முஸ்லிம்களெல்லோரும் எமது திருமறையின் சட்டப் பிரகாரம் சகோதராவார்களாகையால் இவ்வூரில் எனக்கு எதிரி என் நப்சைத் தவிர வேறு யாரையும் விளங்கவில்லையே என்றார்கள்" இதனைச் செவியுற்ற கலெக்டர் ஹளரத்தவர்களின் அழகிய வார்த்தை யையும் அன்னவர்களுக்கு மக்களின்மீதுள்ள கருணையையும் உணர்ந்து சிறிது நேரம் சிந்தனையிலாழ்ந்து விட்டு மனுதார்களால் எதிரிகளை விளங்கி அன்னவர்களை அழைத்துத் கூறியதாவது உங்களால் செய்யப்பட்டிருக்கும் காரியாதிகளை நானே நேரில் பார்வையிட்டிருப்பதால் இது விஷயத்துக்கு மிகுந்த சாட்சியம் தேவையில்லை. ஆனால் ஹளரத்தவர்கள் நடவடிக்கை செய்வதற்கு உத்திரவு கொடாமலிருக்கிறார்கள், அவர்கள் உத்திரவு கொடாதிருப்பது உங்களின் அதிர்ஷ்டமேயாகுமாதலால் இம்மகானிடம் இனி இவ்வாறான துஷ்டகாரியங்கள் நிகழ்த்தா திருங்களென புத்திபுகட்டி திரும்பச்சென்றார். சுப்ஹானல்லாஹ், என்னே ஹளரத்தவர்களின் பொறுமைக்குணம்! இது மட்டிலா இல்லை இல்லை மற்றொரு சம்பவத்தையும் இவண் குறிப்பிடுகின்றேன்.

ஹளரத்தவர்கள் தாங்கள் சில காலம் சௌகரியமாக விருந்துவரவேண்டுமென நினைத்து தாங்கள் கண்காணித்து வரும் மதுரஸா அன்னூருல் முஹம்மதிய்யுவின் தலைமை ஸ்தானத்துக்குத் தகுதியான வேறு ஒருவரை நியமனஞ் செய்ய வேண்டுமென நினைவு பூண்டவர்களாக விருப்பதை மார்க்கத் தர்க்கம் புரிந்து கொண்ட வகையில் தங்களை விரோதிகளாகப் பாவித்துக் கொண்ட ஆலிம்களில் சிலர் அறிந்து ஓர் மௌலவியை சரிசெய்து நீர் அம்மதுரஸாவுக்குச் சென்று உமக்குரிய ஊதியத்தை நிர்ணயித்துக் கொண்டு அம்மதுரஸாவிலமர்ந்தவுடன் அன்னவரை (ஹளரத்தவர்களை) அம்மதுரஸாவை விட்டு அப்புறப்படுத்திவிட

வேண்டிய காரியங்களைச் செய்து கூடிய சீக்கிரத்தில் அப்புறப் படுத்திவிட வேண்டியதென போதனை செய்து அனுப்பி வைத்தார்கள். அம்மலையாள மௌலவியானவர் தம்மை யுண்மையாளர் போல காண்பித்துக் கொண்டு மதுரஸாவிற்கு விஜயம் செய்து ஹளரத்தவர்களிடம் முலாகாதுச் செய்து கொண்டு தமக்கு மதுரசாவில் உபாத்திமைத் தொழில் கொடுக்க வேண்டுமென வேண்டிக் கொண்டனர். ஹளரத்தவர்களுக்கு வந்திருக்கும் மௌலவி எதிர்ப் பார்ட்டியிலுள்ளவரென்பது விளங்கியிருந்தும் நடந்ததும் நடப்பதும் நடக்கப்போவதும் அல்லா (ஹ்) ஜல்லஷானஹூவதஆலாவைகொண்டே என்ற நன்னம் பிக்கையே சதாவும் தரிப்படுத்தியிருப்பவர்களாதலால் இவரின் கெட்ட எண்ணத்தை கொஞ்சமும் லக்ஷியம் செய்யாது அன்னவருக்குத் தகுந்த ஊதியமாக ரூ.75-00 கொடுத்தும் தாங்கள் கவனித்து வந்த நாஜிர் ஸ்தானத்தையும் அன்னவரிடமே ஒப்படைத்தார்கள். அவ்வேலையை ஒப்புக்கொண்ட நாள் முதல் தான் நாடி வந்த காரியத்தை முடிப்பதிலேயே கவனஞ் செலுத்தியவறாகவிருந்து சில மாணாக்கர்களைச் சரி செய்து கொண்டு முத்தவல்லியவர்களுக்கு ஹளரத்தவர்களைப்பற்றி ஓர் அசம்பாவிதமான கடிதம் எழுதும்படி செய்துவிட்டார் அதேபோல் அம்மாணாக்கர்களும் தங்கள் கையொப்பத்துடன் ஹளரத்தவர் களின் மீது சில படுதூர்களை சுமத்தி ஓர் கடிதத்தை முத்தவல்லியவர்கள் வசம் சமர்ப்பித்தார்கள். அக்கடிதத்தைக் கண்ணுற்ற முத்தவல்லியானவர் ஹளரத்தவர்களோடு நீண்ட காலமாக நெருங்கிப் பழகி அவர்களின் சாந்த குணத்தையும் உண்மையையும் மதுரஸாவுக்காக அவர்கள் எடுத்துக்கொள்ளும் பிரயாசையையும் மதுரஸாவுக்கு அவர்கள் செய்துவரும் ஊழியத்தையும் செவ்வனே உணர்ந்திருப்பவராதலால் இக்கடிதம் எழுதியவர்களின் மீது சினமுற்றவராகக் கடிதத்துடன் மதுரஸாவிலுள்ள ஹளரத்தவர்களின் அறையினுள் பிரவேசித் தார். யாமும் அவ்வமயம் அவ்விடமிருந்தோம். கடிதத்தில் காணப்பட்டிருக்கும் குரோதவார்த்தைகளால் ஆத்திரமுற்றிருப் பதோடு ஹளரத்தவர்களை நோக்கி தாங்கள் மிகுத காரியங்களில்

என் வார்த்தைகளை நிராகரித்து விடுவது போலில்லாமல் இச்சமயம் நான் கூறும் வார்த்தைகளுக்குச் செவி கொடுத்து இம்மாணாக்கர்களில் ஐவர்களை இம்மதுரஸாவை விட்டு வெளிப்படுத்திவிட வேண்டுமெனக் கோபாவேசத்துடன் மொழியக்கேட்ட ஹளரத்தவர்கள் அம்மாணாக்கர்கள் என்ன குற்றம் புரிந்தனர் என கேட்டு அவ்வமயம் அக்கடிதத்தைப் படிக்கும்படியாக எமக்கு உத்திரவிட்டார்கள். யாம் படித்தோம் அக்கடிதத்தின் கருத்தாவது ஹளரத்தவர்கள் தற்சமயம் நல்லவரேபோல் பாசாங்கு செய்தாலும் மதுரஸாவின் சொத்தை அபகரித்துக் கொள்ளக்கூடிய கெட்ட எண்ணம் உடையவர் களென்றும் தற்போது நாஜிர் வேலைக்கு வேறு ஒருவர் வந்துவிட்டதால் ஹளரத்தவர்களுக்கு கொடுக்கும் சம்பளமும் சாப்பாடும் ஹராமாகுமென்றும், இனி ஹளரத்தவர்கள் மதுரசாவிலிருந்தால் பல சச்சரவுகள் நிகழுமென்றும், மேலும் உலமாக்களால் காபிராக்கப் பட்டவரென்றும், (நஊது பில்லாஹி மின்ஹா) கண்டிப்பாக விலக்கிவிடவேண்டுமென்றும் குறிக்கப் பட்டிருந்தது. அதனைப் படித்து முடித்தவுடன் ஹளரத்தவர்கள் புன்னகையுடன் கூறியதாவது "நாம் மதுரசாவை அமைத்ததானது அறிவிலிகளை திருத்துவதற்கேயல்லாது துரத்துவதற்கல்ல வாகையால் வீணர்கள் எழுதிய கடிதத்தை வீசி விடுங்கள்" என்றார்கள். சுப்ஹானல்லாஹ்! என்னே ஹளரத்தவர்களின் மனக்கடக்கை, ஹளரத்தவர்களின் காலத்தில் இம்மாதிரியான சம்பவங்கள் இன்னும் எத்தனையோ மலிந்து காணப்பட்டன. விரிவஞ்சி விடுத்தனம்.

## பிறரை மதிக்குந் தன்மை

இவ்விஷயத்தை விபரிப்பதில் யாம் முன்னொரு இடத்தில் கூறியுள்ளது போல் இயலாதவனாகவிருந்தும் இவற்றுள் சில விஷயங்கள் நாம் நற்கெதியடைதற்குள்ள சாதனமாகத் தோன்றுவதால் சிறிதளவு விபரிக்கின்றேன்.

ஹளரத்தவர்களிடம் விருந்தினராக வரும் மௌலவியா கட்டும் அல்லாதவரா கட்டும் யாவரேயாயினும் அன்னவர்கள் எத்தனை காலமட்டும் தாங்களாகவே பிரயாணமாக வில்லையோ அதுவரை ஹளரத்தவர்களின் திருவாக்கால் அன்னவர்களை பிரயாணமாகும்படியாகக் கூறியதை கேட்டறியோம். மேலும் தாங்கள் எவ்விடம்போனாலும் அன்னவர்களையும் இட்டுக் கொண்டு செல்வதேயல்லாது நழுவ விட்டு விடுவதில்லை. மேலும் எதுவரை அன்னவர்கள் மீது முஹப்பத்துடையவர்களாக விருப்பார்களென்றால் வண்டிகளில் போகக்கூடியவிடமாக விருந்தால் முதன் முதலில் அன்னவர்களையே உட்காரச் செய்வார்கள் ஒரு சமயம் குறுகலான ஒரு வண்டியில் அமர வேண்டியவர்களைவிட அதிகமாய் இரண்டு மூன்று பேர்களையும் உட்கார வைத்துக் கொண்டு கஷ்டத்துடன் வரும்போது இவர்கள் நாம் போகுமிடத்துக்கு அவசியமானவர்களல்லவே இவ்விடத் திலேயே இவர்களை விட்டுவிட்டுச் சென்றால் வண்டியில் சவுகரியமாகப் போய்வரலாமேயென யாம் கேட்டதற்கு வலுப்பமாகிய அல்லாஹுத்தஆலாவின் வலியாகிய ஹளரத் தவர்கள் "நாம் தற்போது படும் கஷ்டமானது நாம் முடிவில் சேரக் கூடிய கபுரில் படும் கஷ்டத்தைவிடப் பெரிதல்லவே இதைவிட மகாகஷ்டமானவிடம் நமக்காக தயாரிக்கப்பட்டிருப்பதை மறந்தவராக விருப்பதனால்லவா இந்தக் கேள்வியைக் கேட்கும்படி நேரிட்டதென" பதிலுரைத்தார்கள். மேலும் எமது கூத்தாநல்லூரில் கரீமிய்யா சங்கத்தின் சார்பில் உபதேசம் செய்துகொண்டிருக்கும் ஓரிரவில் மேன்மைதங்கிய ஹளரத்தவர்களின் பார்வையில் எதிரில் வந்துகொண்டிருக்கும் மலையாளத்தைச் சேர்ந்த ஓர் அவுலாதேரசூல் தென்பட்டார்கள். அதே சமயத்தில் உபதேசத்தை நிறுத்திவிட்டு அன்னவர்களை எதிர்சென்று அழைத்து வந்து தங்களுக்காக விரிக்கப்பட்டிருக்கும் உயர் தர விரிப்பில் உட்காரும்படியாகக் கேட்டுக்கொண்டார்கள். அன்னவர்கள் அவ்விரிப்பானது தாங்கள் இருப்பதற்கு தகுதியில்லா திருப்பதென்றோ அன்றி வேறு எக்காரணத்தை முன்னிட்டோ நிலையாகவே நிற்பதைக் கண்டவுடனே தங்களின் சிறப்பான

திருமேனியில் அணிந்திருந்த பச்சை நிறமுள்ள போர்வையை விரிப்பாக்கி வைத்தார்கள். சுப்ஹானல்லாஹ்! இவ்விடத்தில் ஹளரத்தவர்களின் குணப் பெருமையைப்பற்றி எவ்வளவு கூறினும் பொருத்தமுடையதாக விருப்பினும் விரிவஞ்சி விடுத்தனம். சுமார் 500 மக்களுக்கு குறைவில்லாத அம்மஜ்லிசில் இவ்வாறு நடந்து கொள்வதற்கு எவ்வளவு வரை தங்களிலுள்ள அகங்காரத்தை விலக்கியவர்களாக விருப்பார்களென்பதில் விபரிக்க வேண்டியதில்லை. இம்மட்டுமா! இல்லை, இல்லை இவ்வாறே பல சமயங்களில் பல விருந்தினருக்கு பாதரக்ஷையும் தூக்கிக்கொடுக்க யாமே பார்த்துமுள்ளோம்.

## உபதேசிக்குந் தன்மை

ஹளரத்தவர்களிடம் உபதேசம் பெற்றுக்கொள்ள வேண்டிய நாட்டத்துடன் வரும் யாவரேயாயினும் அன்னவர் களாகவே பிராயணப்படும் வரை அவர்களை பிரயாணமாகும்படி ஹளரத்தவர்களின் திருவாக்கால் கூறியிருக்கார்களென்பது மிகையாகாது. மேலும் மிகுதக்காலங்களில் யாமும் எமது சகாக்களுமாக இரவு நேரங்களில் ஹளரத்தவர்களின் உபதேசப்பேரவாவினால் செல்லக்கூடியவர்களாக விருந்ததில் நாங்கள் கண்டதாவது இராக்காலங்களில் எதுவரை நாங்களாக அயர்ச்சியுறவில்லையோ அது வரை ஹளரத்தவர்கள் தங்களின் படுக்கைக்கு போகமாட்டார்கள். பல சமயங்களில் நாங்களே ஹளரத்தவர்களை படுக்கைக்குச் செல்லும்படியாகச் சொன்ன போது "தாங்கள் சிரமத்தைப் பாராது உங்களின் ஊரைவிட்டு இவ்விடம் வந்திருக்கும்போது என் தூக்கம் என்ன பெரிது என்றும், மேலும் நாம் தூங்குவதற்குள்ள சௌகரியமானவிடம் கபுர் இருக்கிறதென்றும், ஒருக்கால் நாளை நாம் மவுத்தை அடைந்துவிடுவோமானால் இவ்விதமான விஷயங்களெல்லாம் யாரோடு சம்பாஷணை செய்வோமென்பதாகவும் அல்லாஹுத் தஆலாவின் பேரானந்தத்தில் சொக்கிவிடும்படியான சந்தோஷத்தைவிட தூக்கத்தில் என்ன ஆனந்த முண்டாகி யிருக்கிறதென" பதிலுரைப்பார்கள். இவ்வாறே பல இரவுகளிலும், பல மனிதர்களாலும் சூழப்பட்டவர்களாகவே

காணப்படுவார்கள். மேலும் வீதிகளில் உபதேசம் புரியுங் காலங்களில் ஹளரத்தவர்களால் பேசவியலாதிருந்தும் எடுத்த விஷயத்தை ஜனங்களுக்கு விளக்குவான் வேண்டி படும் கஷ்டத்தை பார்த்து உபதேசத்தை முடித்து விடுங்களென்று கேட்டுக் கொண்டால் "எம்முடைய வார்த்தைக்கு செவிசாய்ப்பதற்காக பல ஊர்களிலுமிருந்து இவ்வளவு மனிதர்களும் தங்களின் சிரமத்தைப் பொருட்படுத்தாமல் விஜயம் செய்திருக்கும்போது என் சிரமத்தைப் பற்றி கவலை வைப்பது நியாயமா என பதிலுரைப்பார்கள்" மேலும் ஹளரத்தவர்கள் உபதேசம் புரியுங்காலங்களில் எழுந்துநின்று நாற்காலியையோ, அல்லது தங்களின் சிறப்புத்தங்கிய கரத்தில் வைத்துக் கொள்ளும் அசாவையோ பிடித்தவர்களாகவே உபதேசம் புரிவார்கள். இவ்வாறு சுமார் இரண்டரை மூன்று மணிநேரம் வரை நின்று கொண்டிருப்பதால் தாமரை மலர் போன்ற அன்னவர்களின் பாதமானது முட்டுக் காலிலிருந்து சுறப்புற்று வீக்கத்ததைப்போல் காணப்படும். இவ்வாறு ஏற்படுவதால் தாங்கள் நாற்காலியில் உட்கார்ந்து கொள்ளுங்களென்று சொன்னால் "நமது அருமை நாயகம் (ஸல்) அவர்கள் ஜனங்களுக்கு நின்றுகொண்டே உபதேசம் புரியுங் காரணத்தால் அவர்களின் மகிமை பொருந்திய இரு பாதங்களும் வீக்கமுடையதாக ஆகிவிடுமென்பதாக சரித்திரங்களில் கூறப்பட்டிருப்பதால் நானும் அவர்களின் உண்மையான அனந்தரக் காரனாக ஆகுவதற்கு எனக்கும் அவ்வண்ணம் ஏற்பட வேண்டுமே என்பதாக எல்லாம்வல்ல அல்லாஹுத்த ஆலாவிடம் பதினைந்து வருடமாக துஆ விரந்தவனாக இருந்தேன் அந்த எண்ணமானது இவ்வூருக்கு வந்த பிறகே பூர்த்தியடைந்தது. அதை வீணாக்குவதற்காகவா என்னை நாற்காலியில் தரிபடச் சொல்கிறீர்கள்" என பதிலுரைத்தார்கள். மேலும் அவர்கள் எக்காரியங்களிலும் சிறிய சுன்னத்தையும் தவற விடாதவர் களாகவே நடந்து வருபவர்களாக அமைக்கப்பட்டிருந்தார்கள்.

# புகழுக்குரிய குணம்

ஹ)ளரத்தவர்களின் குணப்பெருமையை வரைவ தென்பது முகடுதட்டிய மணலை எண்ணி முடிக்க முன்வந்தவன் கதை யையே ஒக்கும் எனினும் சமூகப் பிரயோஜனத்தை முன்னிட்டு இயன்றவளவு சிறிது குறிப்பிடுகின்றேன். ஹளரத்தவர்களின் இன்திகாலைத் தெரிந்து ஜியாரத்துக்காக வந்திருந்த ஹளரத்தவர்களின் சிஷ்யர்களில் ஒருவர் கூறியதைச் சான்றாக இவ்விடத்தில் குறிப்பிடுகின்றேன்.

"ஹளரத்தவர்கள் இவ்வுலகினிடையே ஜீவித்திருந்த காலங்களில் அவர்களின் அமையப்பெற்றிருந்த குண விசேஷங்களில் ஒவ்வொருவர் ஒவ்வொன்றைக் கண்டிருந்தார்கள். ஆனால் நானாவது பூர்த்தியாக அறிந்து விட்டேனென்பதாகச் சொல்ல வியலாதவனாக விருக்கின்றேன். என்கிலும் நான் விளங்கியுள்ள வரை உங்களுக்கும் தெரியப்படுத்த அவாவுற்றிருப்பதால் நான் கூறப்போவது தாங்கள் விளங்கியதானாலும் செவி சாய்ப்பீர்களென்று ஆதரவு பூண்டவனாகக் கூறுகின்றேன். உலகில் தோன்றியுள்ள வலிமார்களில் ஒவ்வொருவர் களும் ஒவ்வொரு விதமான சிபத்தில் குடிகொண்டவர்களாக இருந்திருக்கிறார்கள். ஆனால் நமது உஸ்த்தாதுனா ஆரிபுபில்லாஹ் ஹாஜ்ஜில் ஹரமைன் ஹாபீஸ் மௌலானா மௌலவி சதுரமுதற்றிஸ் முஹம்மது அப்துல் கரீம் (ரலியல்லாஹு தஆலா அன்ஹு) அவர்கள் பதினான்கு "தே" என்ற எழுத்துக்களைக் கொண்ட பலவிதப் பதவிகளையும் எத்திய காமிலான வலியுல்லா(ஹ்)வாக விருந்தார்களென்பதற்குச் சந்தேகமில்லை, அதாவது: 1 தவக்கல், 2.தவாளிஃ, 3. தக்வா, 4. தஹ்மீது, 5. தவ்பா, 6 தக்பீர், 7. தவ்ஹீது, 8.ஸகாவத், 9. திலாவத், 10. ரியாளத், 11. முஷ்கிலாத், 12. முஹப்பத், 13. ஸம்ஹத், 14. ரஹ்மத் இந்த பதினாலு "தே" வரக்கூடிய மர்த்தபாக்களிலெல்லாம் பூர்த்தியடைந்த இன்சான் காமிலாக விருந்தார்கள்" இவ்விதமான எண்ணத்துலையாத புகழுந் தன்மையைப் பெற்றிருந்தார்க ளென்பதற்கு எத்தனையோ உத்தம பக்தர்கள் சான்று பகர்கிறார்கள், மேலும் ஹளரத்தவர் களிடம் நெருங்கிப் பழகியுள்ள ஒவ்வொருவர்களும் தங்கள் தங்களிடமே

ஹளரத் அவர்கள் நெருங்கிய சினேகிதம் உடையவர்களாக இருந்தார்கள் என சொல்லிக்கொள்வார்கள். என்னே ஆச்சரியம் ஒவ்வொருவர்களிடமும் அத்துனை தாராள சிந்தையுடனும் உள்ளன்புடனு மிருந்தார்களென்றால் எத்துனைப் பெருந்தன்மை படைத்தவர்களாகவும், மனித கோடிகளில் எவ்வளவு முஹப்பத் துடையவர்களாகவு மிருந்திருக்க வேண்டுமென்பது வாசகர் களுக்கு விளங்காததன்று. இவ்வாறு புகழ்தற்குரிய குணங்களை அமையப்பெற்றவர்களாகவும் துனியானவானது வழிப்போக்கர் களுக்காக ஏற்படுத்தப்பட்ட சத்திரத்தைப் போன்றதாகையால் அதனை ஆசிப்பது மடத்தனத்துக்கு தலையாகுமென்று உரைப்பவர்களாகவும் அதனை விட்டு தூரப்பட்டவர்களாகவும் கிருபையே உருவாகவும் ஆண்டவனைப் புகழ்வதே தங்களின் வாழ்க்கையுமாகக் காலங் கடத்தி வந்தார்கள். அவ்வாறே நடந்துவந்து தங்களின் நாட்டப்படி முக்தியடைந்த கூட்டத்தில் சேர்ந்துவிட்டார்களென்பதற்கு அத்தாக்ஷி அவர்களை நேரில் கண்டவர்களுக்குத் தெளிவாக விளங்கியிருந்தாலும் அவர்களைக் கண்டிறாத ஏனைய சகோதரர்களும் அவர்களின் வஸீலாவைக் கொண்டு நற்பலனடையும் பொருட்டு ஹளரத்தவர்களின் ஹயாத்திலேயே நிகழ்ந்த சில வெளிரங்கக் கறாமாத்துகளை இவ்விடத்தில் விபரிக்கலானேன். தற்காலம் மதுரஸா அன்னூருல் முஹம்மதிய்யுவில் உபாத்தியாயராக விருந்துவரும் மௌலவி பதுருத்தீன் அவர்களால் ஹளரத்தவர்களின் மீது அரபியில் எழுதப் பட்டிருக்கும் சில விஷயங்களை இவ்விடம் விளக்குகிறேன். "ஹளரத்தவர்களின் தாயாரில் நின்றும் சொல்லப்படுகிறது, நான் எனது பிள்ளையாகிய அப்துல் கரீம் என்பவரை நான் ஆண்டவனின் ஞாபகத்திலேயே தரிபட்டிருந்தும் என் புருஷனார் குர்ஆனை ஓதி முடிவுசெய்த இரவுமான ஓரிரவில் ஹமலானேன். அவ்வாறு நான் ஹமலான நாள் தொடுத்து ஒருவித சந்தோஷ மடைந்தவர்களாகவே இருந்து வந்ததுடன் மிகுத இரவுகளில் பல அழகான கனவுகளை காண்பவளாகவுமாகி யிருந்தேன். அவைகளில் அழகிய உடைகளை அணிந்தவர்களும் அரபிகளைப் போன்ற சாயலுடையவர்களுமான மனிதர்கள்

அடிக்கடிவருவதுடன் மிகைப்புள்ள அழகையுடையப் பெண்கள் வருபவர்களாகவும் என்னுடைய ஹமலைப்பற்றி நற்செய்தி கூறுபவர்களாகவும் ஆகியிருந்தார்கள். மேலும் கர்ப்பத்தின் காலம் முடிவடைந்த பொழுது எங்களின் வீட்டில் சமையல் வேலைக்கான காரியங்களைச் செய்து கொண்டிருக்கும் சமயம் பிள்ளைகள் பிரசவிக்கும்போது ஏற்படும்படியான கஷ்டங்கள் ஒன்றுமில்லாமல் பிள்ளை பிறக்கப்போவதுபோல் காணப்பட்டது. அவ்வாறு காணப்பட்டவுடன் என் சுற்றத்தார்களை அழைத்து வரும்படி சொன்னேன். அழைக்கப்போனவர்கள் திரும்புவதற்குள் யாதொரு கஷ்டமுமில்லாமல் குழந்தை வெளிப்பட்டு விட்டது. வந்தவர்கள் ஆச்சரிய முற்றவர்களாக என்னையும் குழந்தையையும் அப்புறப் படுத்தினார்கள் மேலும் குழந்தை பிறந்த பின் மற்றப் பிள்ளைகளைப் போல் அழுகாமலும் பாலுக்காகத் தேட்டமில்லாத தாகவுமிருந்தே வளர்ந்து வந்தது. மேலும் தன்னுடைய இளம் பிராயத்தில் மற்றப் பிள்ளைகளைப் போலில்லாமல் மிகுந்த சாந்தகுணமுடையவராகவும் சதா தன் காரியத்திலேயே பராக்குடையவராகவிருந்து குர்ஆன் ஷரீபைப் பாடமிட்டுக் கொண்டனர். அவரின் நடைகளைப் பார்த்து இவர் பின்காலத்தில் ஒரு சூபியாக ஆகுவாரோ என்று எண்ணிக் கொண்டேன். அப்பிள்ளை அரபிக் கல்வியைக் கற்க ஆவலுற்றிருப்பதாகத் தெரிவித்தவுடன் மதுரஸா ஜமாலிய்யாவுக்கு அனுப்பி வைத்தோம். மதறாஸ் மதுரஸா ஜமாலிய்யாவிலும் வேலூர் மதுரஸா பாக்கியாத்துஸ்ஸாலிஹாத்திலுமாக ஆறு வருடங் களுக்குள் தனக்கு வேண்டிய இல்முகளைக்கற்றுக் கொண்டு மௌலவி யென்ற பட்டத்துடன் ஊர்வந்து சேர்ந்தார். மேலும் அவர்களின் ஜீவிய கால முழுவதிலும் என் மனதுக்கு வருத்த மில்லாமல் நடந்து வருபவர்களாகவே ஆகியிருந்தார்கள். மேலும் அவர்களுக்கு வைத்தியம் செய்து கொள்வதற்காக மன்னார்குடி வைத்திய சாலைக்குச் சென்றிருக்கையில் அவர்கள் வபாத்தான ஞாயிற்றுக் கிழமை இரவில் அவர்களுக்கிருந்த நிலைமையைக் கண்டு வருத்தமடைந்தவளாக இருக்கும் சமயம் அவர்களின் நின்றும் சில விஷயங்களைச் கண்டேன். அதாவது அவர்களின் எதிரில் யாரோ

ஒருவர் இருப்பது போலும் அவருடன் சம்பாஷனை செய்வது போலும் அதைக்கொண்டு சந்தோஷமடைந்தவர்போலும் வந்தவரின் மீது ஸலாம் சொல்பவராகவுமிருப்பதைக் கண்டு பிள்ளையின் பயணம் சமீபித்து விட்டதாகயெண்ணி திகிலடைந்தவனாக இருந்தேன். அச்சமயத்தில் என்னை விளித்து இவ்விடத்திற்கு நாயகம் (ஸல்) அவர்கள் மற்ற நபிமார்களுடன் விஜயம் செய்திருக்கிறார்கள் தாங்களும் அவர்களுக்கு சங்கை செய்வீர்களாக என உரைத்தார்கள்.

ஹளரத்தவர்களின் தகப்பனாரைத் தொட்டும் சொல்லப்பட்டிருக்கிறது. நான் குர்ஆனை பாடமிட்டபின்பு எத்தனையோ பிள்ளைகளுக்கு பாராயணம் செய்து கொடுத்திருக்கிறேன் ஆனால் என் பிள்ளைக்கு பாடம் வந்தது போல் யாருக்கும் வந்தது நான் பார்க்கவில்லை. மேலும் நானும் என் பிள்ளையும் என் பெண்சாதியுமாக மக்கா ஷரீபுக்கு ஹஜ்ஜின் நிமித்தம் பம்பாயிலிருந்து கப்பலில் போய்கொண்டிருக்கும் போது ஓர் நடு இரவில் என் பிள்ளை என்னை எழுப்பினார். நான் விழித்துப் பார்க்கும் போது மிகுந்த திடுக்கமுடையவராக்ககண்டு என்ன ஏற்பட்டதென்பதாக வினவினேன் அப்போது அவர் கூறியதாவது நான் கண்ட கனவானது என்னை திடுக்கிடச் செய்து விட்டது. அதாவது ஹயாத்தாக விருக்கப்பட்ட வலிமார்களிலும் மறைந்துவிட்ட வலிமார்களிலும் மிகுதமாக ஓர் கூட்டம் என்னை முன்னோக்கி வந்தது. அவ்வாறு வந்தவர்களில் ஓர் பெரியவர்களின் கரத்தில் பச்சைப் போர்வையால் மூடப்பெற்ற தட்டு ஒன்றும் காணப்பட்டது. அன்னவர்கள் என்னை சமீபித்து வந்து தங்களின் கரத்திலிருந்த மேல்கண்ட போர்வையை என்மீது போட்டும் அத்தட்டில் காணப்பட்ட பழங்களில் சிலதை உண்ணும்படியும் கொடுத்து உமக்கு விலாயத்தைக் கொடுக்கப் பட்டதென்பதைத் தெரியப்படுத்துகிறோமென்பதாகவும் கூறினார்கள்.

ஹளரத்தவர்களின் உத்தம பத்தினியான ஹலிமா பீவியைக் கொண்டும் சொல்லப்பட்டிருக்கிறது. என்

கணவரானவர்கள் தாருல்பனாவை விட்டும் தாருல் பகா அளவில் செல்வதற்குச் சில தினங்களுக்கு முன் ஓர் கனவு கண்டேன். அதாவது தண்ணீர் கொண்டு வருவதற்காக ஆற்றங்கரைக்கு போய் நின்று கொண்டிருக்கிறேன் ஆற்றில் பூராவும் ஜலம் போய்க் கொண்டிருக்கிறது அதில் சிறப்புத் தங்கிய குர்ஆன் துண்டு துண்டாகப் போய்கொண்டிருப்பதைக் கண்டு விசன முற்றவளாக அதனை எடுக்க நாடி மிகுந்த பிரயாசைப் பட்டேன். ஆனால் என் எண்ணம் பூர்த்தியடையாமலாய்விட்டது இவ்வாறு கண்டு திடுக்கிட்டு விழித்து ஆண்டவன் பக்கம் சாட்டியவளாக விருந்துவிட்டேன். (இவ்விடத்தில் ஹளரத்தவர்களின் திருவாக்கால் கேட்டதில் நின்றும் கூறுகிறேன் ஒரு சமயம் ஹளரத்தவர்கள் நோய்ப்பட்டு கஷ்ட திசையிலிருப்பதாகவும் இதில் சுகமடைவது அபூர்வமென்றும் கேள்விப்பட்டு யாம் எமது சகாக்களுடன் இரவு மணி 9.00 க்கு எமதூரை விட்டு புதக்குடிக்குச் சென்றோம். ஹளரத்தவர்களின் குடியிருப்பு வீட்டுக்கு எதிரிலுள்ள மரத்தின் நிழலண்டையில் ஓர் உருவம் நடமாடுவதைக் கண்டு கூர்ந்துப் பார்த்ததில் ஹளரத்தென விளங்கி சந்தோஷ மடைந்தவர்களாக முஸாபஹாச் செய்து விட்டு விஷயத்தை விசாரணை செய்ததில் தங்களுக்கு மஃரிபின் வக்துவரை நடந்தது ஒன்றும் தெரியாதென்றும் அதன் பின்பு யாரோ ஒருவரால் தங்களிடமிருந்த வியாதியை பிடுங்கப்பட்டது போலிருப்பதாகவும் கூறினார்கள். அப்போது தங்களுக்கு ஆண்டவனின் நாட்டப்படி மவுத்து வந்துவிட்டால் என் செய்தென்ற கவலை மனதைக் கலங்கச் செய்து விட்டதெனக் கூறினோம். அதற்கு அவர்கள் கூறியதாவது தங்களின் கலக்கமானது ஞாயமானது தான் ஏனெனில் ஓர் குதுப்கானா வாவது (லைப்ரேரி) அழிந்து போவதைக் கொண்டு யாரும் வருத்த மடையாமலிருக்க முடியாதல்லவா அதைப்போல் நானும் 20 வருஷமாகச் சேகரம் செய்யப்பட்ட ஓர் குதுப்கானா (வாசகசாலை) வாக விருக்கின்றேன் என்றார்கள். த.ச. ஆக்கியோன்

# மதுரசாவிலுள்ள மாணாக்கர்களுக்கு அதபு வருத்தும் விஷயமாக மேன்மை தங்கிய ஹளரத்தவர்கள் திருவுளம்பற்றியது.

நான் நெல்லிக்குப்பத்தில் ஓதிக் கொடுத்துக் கொண்டிருக்கும் காலத்தில் நாகூருக்கு விஜயம் செய்திருந்தேன். தர்காவின் வடபுரத்திலுள்ள நவாப் பள்ளிவாசலில் அன்றிரவு ஜுப்பாவும் தலைப்பாகையுமில்லாதவனாக உறங்கிக் கொண்டிருக்கும் போது ஹஜ்ரத் ஷாஹுல் ஹமீது (ரலி) அவர்கள் சில பகீர்களுடன் என்னை நோக்கி வந்தார்கள். நான் எழுந்து அவர்களுடன் முஸாகாதுச் செய்து கொண்டு பல விஷயங்களை பேசிக் கொண்டிருக்கும் போது அவர்கள் என்னை நோக்கிக் கூறியதாவது தாங்கள் ஏன் சுன்னத் ரசூலாகிய தலைப்பாகை அணிவதையும் ஜுப்பா போடுவதையும் விட்டு விட்டு வந்தீர்கள் நீங்கள் மனிதர்களில் சிறப்புத் தங்கியவர்களாதலால் அவைகளை விட்டுவிட வேண்டாமென்றார்கள். அன்று முதல் நான் தலைப் பாகை, ஜுப்பா அணிவதை விடாமலிருப்பதுடன் மற்றவர் களையும் ஏவுகின்றவனாகவிருக்கிறேன். மேலும் நான் நெல்லிகுப்பத்திலிருக்கும் பொழுது இரவு காலத்தில் மைதானங்களில் தனிவழி நடந்து வருவதுண்டு. ஓரிரவு அவ்வாறு நான் சென்று கொண்டிருக்கும்போது என் எதிரில் ஓர் கருத்த இருள் வந்து மறைத்தது. என்னிடத்திலுள்ள தவ்ஹீதின் தைரியத்தைக் கொண்டு அதை நோக்கி ஓ! இருளே உன்னால் என்னை என்ன செய்யவியலுமெனக் கேட்டேன். என்னால் என்ன செய்யவியலா தென்பதாக அதிலிருந்து ஓர்தொனி பிறந்தது உடனே உன்னால் ஒன்றும் செய்ய வியலாது அவ்வாறு ஏதாவது நிகழ்ந்தால் அவை ஆண்டவனால் நிகழ்ந்ததாகுமென்றேன். உடனே அந்த இருளானது சாம்பலாக நீத்துப் போய்விட்டது. மேலும் நான் அவ்வூரிலிருந்து வருங்காலங்களில் "கிலுரு" (அலை) அவர்கள் என்னிடம் வந்து சம்பாஷணை செய்து கொண்டிருப்பார்கள். மேலும் நான் ஓர் இரவு தூக்கத்திலிருக்கும்போது ஒரு மனிதர் என் சமீபத்தில் வந்து தான் கொண்டு வந்த மூன்று தாவீஜ்களையும்

எடுத்து என் கழுத்தில் ஒன்றும் என் வலதுகையில் ஒன்றும் இடது கையில் ஒன்றுமாகக் கட்டிவிட்டுப் போய்விட்டார். நான் என் வலதுகையிலிருந்ததை அவிழ்ந்துப் பார்த்தேன். அதில் "அவலம் யரல் இன்ஙாஹு அன்னாஹலக்னாஹு மின்னுத்பதின்ப ஃப இதாஹுவ ஹஸீமும்முபீன் என்று எழுதப் பட்டிருந்தது. இடது கையிலிருந்ததை அவிழ்த்துப் பார்த்தேன் அதில் "மதாஉத் துன்யா கலீல்" என்று எழுதப் பட்டிருந்தது. பின்பு என் கழுத்தில் கட்டப்பட்டிருந்ததையும் எடுத்துப் பாத்தேன் அதில் "இன்னமல் இல்மு இன்தல்லாஹ்" என்று எழுதப்பட்டிருந்ததையும் பார்த்த காலத்திலிருந்து தலைமைத் தனம் தேடவேண்டுமென்ற அவாவையும், துன்யாவின் மீதுள்ள முஹப்பத்தையும் என்னிலிருந்த ஹிருசையும் நீக்கிவிட்ட வனாகவும் நப்சைச் கொண்டு தெண்டிருப்பவனாகவும் எக் காரியத்தையும் ஆண்டவன் பக்கல் சாட்டுபவனாகவுமாகி விட்டேன், மேலும் பண்ருட்டியில் அடங்கியுள்ள நூருமுஹம்மது (ரஹ்) வலியுல்லாஹ் அவர்களின் ஜியாரத்துக்காகப் போய் படுத்திருந்தேன். இரண்டு இரவு வரை ஒன்றும் காணப்படாததால் வருத்தமடைந்தவனாக மூன்றாவது இரவு உறக்கத்திலிருக்கும் போது அன்னவர்கள் வந்து சொன்னதாவது, நீர் ஏன் என்னளவில் ஹாஜத்தானீர்? உம்முடைய ஒரு கரத்தில் வெல்லுப்பந்தங்கிய குர் ஆன் ஷரீபும், மற்றொரு கரத்தில் சங்கை பொருந்திய நாயகம் (ஸல்) அவர்களின் வஸீலாவும் இருந்து வருகிறதே! என்றார்கள். உடனே நெல்லிக்குப்பம் திரும்பி விட்டேன்." (இதுவரை கூறிவந்தது அரபியிலுள்ள மவுலூதில் காட்டப்பட்டிருப்பதின் சுருக்கம்)

ஹளரதத்தவர்கள் நெல்லிக்குப்பம் மதுரசாவில் உஸ்தாதாக இருந்து வருங்காலங்களில் மிகுதம் இரவுகளில் கப்ருஸ்தான் களுக்குச் சென்று வருபவர்களாகவிருப்பதைக் கண்ணுற்ற மாணாக் கரொருவர் ஓரிரவு பின்தொடர்ந்து பார்த்துக் கொண்டிருந்தார். அவ்வமயம் ஹளரதத்தவர்கள் ஓர் மக்புறாவொண்டையில் நெருங்கி யவுடன் ஹளரத்தல்லாத மற்றொரு உருவம் ஹளரத்தவர்களுடன் சம்பாஷணை செய்வதைக் கண்டு திடுக்கமுற்று அசைவற்றவராக நின்று கொண்டிருந்தார்.

அவ்வமயம் ஹளரத்தவர்கள் மாணாக்கரை நோக்கி எதிர்வந்து தாம் இவ்விடம் வந்தது மகாத் தவறென்றும் இப்போது நீர் கண்ட விஷயங்களை யாரிடத்தும் பகரக் கூடாதென்றும் தாக்கீது செய்திருக்கிறார்கள்.

மதுரசா அன்னூருல் முஹம்மதிய்யுவில் ஒரிரவு ஒரு மணிக்குமேல் சில நண்பர்கள் ஹளரத்தவர்களிடம் ஹிதோபதேசம் பெற்றுக் கொண்டிருக்கும் சமயத்தில் ஹளரத்தவர்கள் வழக்கம்போல் மெய்மறந்த நிலைமையில் காணப்பட்டார்கள். சிறிது நேரத்துக்கு பின் தங்களின் அசல் நிலைமையில் மீண்டவர்களாகவாகி எதிரிலிருந்தவர்களை நோக்கி இராணிப் பேட்டையில் தங்களின் குழந்தை ஆண்டவன் பக்கல் மீண்டு விட்டதாக ஓர் தந்தி கிடைத்ததெனக் கூறியவுடன் அன்னவர்கள் அத்தந்தியை நாங்களும் காண நாடுகிறோமென்றனர். தாங்கள் பார்வைக்குக் கிடைக்க வேண்டிய தந்தியானது காலை 8.00 மணிக்கு கிடைக்குமென பதிலுரைத்தார்களாம் அதே போல் காலை மணி 8.00 க்கு ஓர் தந்தி கிடைத்தது. பின்னொரு சமயம் கூத்தாநல்லூர் மதுரசாவில் காலராவினால் பீடிக்கப்பட்டு இறந்து போன மாணாக்கரின் செய்தியையும் மதுரசா அன்னூருல் முஹம்மதிய்யுவிலேயே இருந்து கொண்டிருக்கும் போது கூறியதுடன் மதுரசாவின் முத்தவல்லி ஹாஜி பொ.செ.பகீர் முஹம்மது றாவுத்தர் அவர்களின் தாயார் புதக்குடியில் இறந்து போன விஷயத்தை நெல்லிக்குப்பத்தில் தெரிவித்து விட்டு ஜனாசாவுக்கு புதக்குடிக்கு வந்து சேர்ந்து விட்டார்கள்.

புதக்குடி மதுரசா மாணாக்கர்களுக்கும் அவ்வூர் பொது ஜனங்களில் சிலருக்குமாக சிறிய சச்சரவுகள் நிகழ்ந்ததின் காரணமாய் சிலருக்குள் கைச் சண்டைகளும் நடக்கலானது அச்சமயம் மதுரசாவின் உள்ளிலிருந்த ஹளரத்தவர்கள் வெளியில் வந்து மாணாக்கர்களை கண்டனம் செய்து அனுப்பி விட்டுத் தாங்கள் வெளியில் ஹவுலுக்கு சமீபத்தில் பகல் மணி 10.க்கு உலாவிக் கொண்டிருக்கும் சந்தர்ப்பத்தில் ஊர் தலைவர்களில் ஒருவர் ஹளரத்தவர்களின் மீது சினங் கொண்டவராக பலவாறு

திட்டிக்கொண்டு ஹளரத்தவர்களை தானே நேரில் தகர்க்கப் போவதாய் வந்து கொண்டிருப்பவரை ஹளரத்வர்கள் எதிர்சென்று அன்னவரின் ஒரு கரத்தை தங்களின் கரத்தால் பற்றிப் பிடித்துக்கொண்டு தாங்கள் எங்கு செல்கிறீர்களென வினவ அன்னவர் கூறிய பதிலாவது நீர் என் கரத்தை விட்டுவிடும் நான் மதுரசாவின் உள்ளே போய் அந்த அப்துல் கரீம் என்பவரின் தலைமயிரைப் பிடித்து வெளியில் கொண்டுவரப் போகிறேனெனக் கூறிவிட்டு ஹளரத்தவர்களால் பிடிக்கப்பட்டிருக்கும் கரத்தை விருவாக இழுத்துக்கொண்டு மேலே சென்று சச்சரவை வளர்த்துக் கொண்டார். அச்சமயம் ஹளரத்தவர்களின் உருவம் வேற்றுருவமாகத் தோற்றப்பட்டது போலும்! அவ்வாறில்லாவிடில் கண்டிப்பாக அடித்தே இருப்பார் என்பதற்கு யாதொரு சந்தேகமுமில்லை. என்னே! ஆண்டவன் தன் பக்தர்களுக்கு தானே செய்யும் பேருபகாரம்.

மற்றொரு சமயம் திண்டுக்கல்லுக்கடுத்த கோயிலூருக்கு ஏதோ காரணத்தை முன்னிட்டுச் சென்றிருக்கும் போது ஓர் இரவு அவ்வூர் பள்ளிவாயலில் நித்திரை புரிந்தார்கள் - அவ்வமயம் அன்னவர்களோடு சென்றிருந்த ஒருவர் விழித்து எழுந்தார். ஹளரத்தவர்களுக்குச் சமீபத்தில் ஓர் ஒளிவானது தோன்றுவதும் மறைவதுமாகக் காணப்பட்டவுடன் திடுக்கமுடையவராகச் சிறிது நேரம் அசைவற்று நின்று தன்னைத் திடம் பண்ணிக் கொண்டு ஹளரத் தவர்களின் சமீபத்தில் நெருங்கி கூர்ந்து நோக்கும்போது ஹளரத்வர்களின் நாசித்துவராத்திலிருந்து வரும் சுவாசமானது வெளியில் புறப்படும்போது ஒளிவாகத் தோன்றுவதும் உட்செல்லும்போது மறைந்துவிடுவதுமாகக் காணப்பட்டவுடன் மிகுந்த திகிலடைந்தவராக அசைவற்று மரத்தைப் போல் நின்று விட்டார். அது சமயம் ஹளரத்தவர்கள் விழித்து எதிர் நிற்பவரை நோக்கித் தூங்கும் காலங்களில் தாம் இவ்விடம் வரவேண்டிய காரணமென்னவென வினவினார்கள். அன்னவர் தாம் கண்ட வற்றைக் கூறினார். ஹளரத்தவர்கள் இன்று நீர் கண்ட விஷயங்களை வேறு எவரிடத்தும் கூறக் கூடாதெனத் தாக்கீது செய்துள்ளார்கள்.

ஓர் வருடம் புதக்குடியின் கண் கூடு எடுக்கக் கூடாதென சுமார் 10 நாட்கள் வரை வீதிகளில் உபதேசம் செய்தும் அவ்வூர் ஜனங்களில் சிலர் முக்கியமாக கூண்டு எடுக்க வேண்டுமெனத் தீர்மானம் செய்திருப்பதையறிந்து அவ்வாறு செய்வார்களாயின் மதுரசாவுக் கெதிரிலுள்ள வீதியில் முத்தவல்லி அவர்களால் போடப்பட்டிருக்கும் கொட்டகையை அப்புறப்படுத்த மாட்டோம் அவ்வீதியில் கூண்டை விடக் கூடாதெனச் சொல்லி அனுப்பியும் அன்னவர்கள் அதையும் பொருட் படுத்தாமல் கவர்ன் மெண்டின் உதவி தேடி போலீசின் காவலோடு கூட்டை ஊர்வலஞ்செய்ய முற்பட்டார்கள். மேலே விபரித்தது போல் கொட்டகையைப் பிரித்துக் கொடுக்காதிருந்ததுடன் அவ்விடத்தில் அன்றிரவு உபதேசமும் செய்யலானார்கள். அவ்வமயம் இரவு மணி 1½க்கு போலீசாருடன் கூண்டை அவ்விடம் கொண்டுவரலாயினர் போலீசாரின் உதவியைக் கொண்டு அக்கொட்டகையை அப்புறப்படுத்தி விடவேண்டுமென்பதே அன்னவர்களின் நோக்கமாகும். ஆனால் போலீசார் அவ்விடத்தில் குழுமியுள்ள ஜனத்திரளைக் கண்டபின் அன்னவர்களின் கோரிக்கைக்கு அனுமதியளிக்க முடியாதெனக் கூறியபின் அவ்வீதிக்குள்ள மற்றொரு வழியாகக் கூண்டைக் கொண்டு வந்து ஹஸரத்தவர்கள் உபதேசம் செய்து கொண்டிருக்கு மிடத்துக்கு சுமார் 50 கெஜ தூரத் துக்கப்பால் நிறுத்திக்கொண்டு உபதேசத்துக்கு ஹானி விளையும் வண்ணம் வாத்தியங்களை முழங்கலாயினர். உபதேசத்தின் சப்தம் ஜனங்களுக்குக் கேட்காவண்ணம் வாத்தியங்களின் தொனியானது மிகைபட்டவுடன் சுப்ஹானல்லா(ஹ்) ஹஸரத்தவர்களுக்கு ஒருவித ஐத்புண்டாகி "இவர்களென்ன நம்மை ஏளனம் செய்கிறார்களா? இவர்கள் நம்மின் தன்மையையன்றோ விளங்கவில்லை. நாம் இக்கூண்டை தீக்கிரையாகி விடுமென்று மொழிந்தால் அவை தீக்கிரையாகி விடாதா" வென மொழிந்த க்ஷணமே அக்கூண்டின் ஒரு பகுதியில் கொடிய அக்கினி ஜுவாலையானது தாவ ஆரம்பித்தது. உடனே அத்தீயை அணைத்துவிட்டுக் கூண்டை அப்புறப்படுத்திக் கொண்டு போய் விட்டனர். சுப்ஹானல்லா(ஹ்) என்னே அல்லாவைச் சார்ந்த வலிமார்களின் நாவன்மை.

ஈசவி 1920ம் ஆண்டில் ஹளரத்தவர்கள் தங்களின் பந்துமித்திரர்களுமாக ஒன்பதவர்களை இட்டுக் கொண்டு சொர்ப்பத்துகையுடன் திரு மக்கா ஷரீபுக்குச் சென்றார்கள். அவ்விடம் றம்ளான் மாதத்தைக் கடத்திவிட்டு ஷவ்வால் மாதம் மதீனாமுனவ்வராவுக்குப் பிரயாணப்படவேண்டிய சமயத்தில் தங்களிடமிருந்த பொருள்கள் செலவழிந்து போய் பொருளில்லா திருப்பதைப் பற்றி சிந்தனை செய்தவர்களாக தஹஜ்ஜத்தின் வக்தில் சிறப்புத் தங்கிய கஃபாவின் ஹரத்தில் தங்கியிருந்தார்கள். அவ்வமயம் முன்னால் அறிந்திராதவரும் வெண்துயில் புணைந்தவராகவும் அரபிகள் போன்ற சாயலை யுடையவருமான ஒருவர் ஹளரத்தவர்களைச் சமீபித்து ஒர் முடிப்பை ஹளரத் தவர்ககளின் கரத்திலீந்துவிட்டு யாதொன்றும் பகராமல் சென்று விட்டார்கள். அதனைத் திறந்து பார்வையிட்டத்தில் தாங்கள் மதீனாவுக்குச் செல்லப் போதிய பவுன்கள் காணப்பட்டது. மறுதினமே பிரயாணமாகிச் சென்றார்களாம். அது முதல் பம்பாய் வரும் வரை பல தடவைகளிலும் அன்னவராலேயே பல தடவையாகப் பொருள் கொடுத்து வரப்பட்டதாம். சுப்ஹானல்லா(ஹ்) என்னே தன்னளவில் லயித்துப் போன பக்தர்களுக்கு ஆண்டவன் செய்யும் பேருபகாரம்.

மதீனா முனவ்வராவில் அருமை நாயகம் முஹம்மது முஜ்தபா அஹ்மது முஸ்தபா ரஸூல் (ஸல்) அவர்களின் ரவ்ளா ஷரீபில் நின்றுகொண்டு துஆ விரந்தவர்களாக நாயகம் (ஸல்) அவர்களுக்கு ஸலாமுரைத்தவுடன் உள்ளிலிருந்து துடர்ந் திருப்பவரின் செவியிலும் கேட்கும்படி அலைக்கு முஸ்ஸலாமென பதில் கிடைத்ததாம். சுப்ஹானல்லா(ஹ்) என்னே நாயகம் (ஸல்) தங்களின் மீது காதல்பூண்ட உம்மத்துக்களின் பக்கல் கொண்டுள்ள உள்ளன்பு. மேலும் ஹளரத்தவர்கள் எமதூருக்கு விஜயம் செய்திருக்கும் போது பெரிய பள்ளியில் ஒரிரவு சுமார் ஒரு மணிக்கு மேல் ஹளரத்தவர்களை அவர்களின் படுக்கையில் காணாததால் எவ்விடம் சென்றிருப்பார்களெனத் தேடப் புறப்படும் சமயம் பள்ளிவாயலின் மற்றொரு பக்கத்தில் மனித சந்தடி தெரியப்பட்டு அவ்விடம் நோக்கும்போது ஹளரத்தவர்களை

யோக முறையில் தலைப்பக்கம் கீழாகவும் பாதமானது மேலாகவு மிருப்பதாகக்கண்டு திடுக்கிட்டு வெளியில் வந்த ஒருவரிடம் விஷயத்தைத் தெரியப்படுத்தி இருவருமாகப் பார்க்கச் செல்லும் போது ஹளரத்தவர்களை உலாவிக் கொண்டிருப்பவர்களாகக் கண்டார்கள். ஹளரத்தவர்களுக்கு இரு ஜின்கள் தொண்டு செய்வதைப் பல தடவைகளில் கண்ட பலரும் ஹளரத்தவர்களை வினவியபோது கூறியதாவது நான் நெல்லிக்குப்பத்திலிருந்து வரும்பொழுது இராக்காலங்களில் மிகுதமாக ஊருக்கு வெளியில் போய் வருவதுண்டு. அச்சமயங்களில் குப்பறாகிய ஜின்கள் என்னை தொந்தரவு செய்ய முற்பட்டது. அக்காலத்தில் இந்த இரண்டு ஜின்களையும் பாதுகாவலுக்காக மஹ்பூப் சுப்ஹானி முஹிய்யத்தீன் அப்துல் காதிர் ஜெய்லானி (ரலி) அவர்களால் அனுப்பி வைக்கப்பட்ட தென்றார்களாம்.

வருடாவருடம் மதுரசா அன்னூருல் முஹம்மதிய்யுவில் ரபீயுல் அவ்வல் மாதம் 6ம் தேதிகளில் அருமை நாயகம் (ஸல்) அவர்கள் பிறந்த தினத்தை கனதிப் படுத்துவதற்காக அன்றிரவு பூறாவும் மவுலூது ஷரீபும், உபதேசங்களும் நடை பெற்றுவரும். மிகுதமாக சுற்றுக் கிராமத்திலிருந்து பல ஜனங்களும் விஜயம் செய்வார்கள். சென்ற ஹிஜ்ரி 1345ம் ஆண்டின் ரபீயுல் அவ்வலில் வழக்கம்போல் 6ம் தேதி இரவில் நடைபெற்ற மஜ்லிசிற்கு எமதூரின் நண்பர்களில் சிலர் சென்றிருந்தார்கள். அன்றிரவு சுமார் 10.00 மணிக்கு கீழ் வாசல் கதவுகளைத் திறந்து கொண்டு இரு மனிதர்கள் மவுலூது நடைபெறும் மேல் மாடிக்கு விஜயம் செய்தார்கள் அன்னவர்களின் தோற்றம் வடதேசத்து மனிதர்கள் போல் காணப்பட்டதுடன் வேறு எவரிடமும் சம்பாஷணை செய்யாமல் மஜ்லிசில் அதபுடன் அமர்ந்து விட்டார்கள். சுமார் ஒரு மணி நேரத்துக்குப் பிறகு வந்தவர்களில் ஒருவருக்கு ஜதுபுண்டாகி திரேகங்களெல்லாம் சிலிப்புற்று பிரக்ஞையற்று விழுந்துவிட்டார். அவரண்டையில் யாரும் நெருங்க வேண்டாமென மற்றொருவர் உத்தரவிட்டு விட்டார். சுமார் ஒரு மணி நேரத்துக்குப்பின் அன்னவர்களுக்கு உணர்ச்சியுண்டாகி எழுந்து இருவருமாக ஹளரத்தவர்கள் வீற்றிருக்கும் அறைக்குள் சென்றனர். அறையின்

கதவுகள் மூடப் பட்டுவிட்டது. இதனை ஞாபகத்துடன் கவனித்து வந்த எமதூராரர்கள் சில நேரத்துக்குப்பின் அறையினுள் புகுந்தார்கள் உள்ளில் ஹளரத்தவர்கள் மட்டிலும் தனியாக வீற்றிருப்பதையும் உள் சென்ற இரு மனிதர்கள் காணாமலாய் விட்டதையும் கண்டு திடுக்கிட்டு பிரமை கொண்டவர்களைப் போல் நின்றவர்களை ஹளரத்தவர்கள் நோக்கி என்ன இவ்வாறு திகைப்புக் கொண்டிருக்கிறீர்களென வினவ அன்னவர்கள் ஹளரத்தவர்களின் பாத கமலங்களை முத்தமிட்டவர்களாகத் தற்போது இவ்விடத்தில் வந்தவர்கள் யாவர்? அன்னவர்கள் எவ்வழியாகச் சென்றனர்கள், இவ்வொரு வாயிலைத் தவிர்த்து இவ்வறைக்கு வேறு வாயல்தான் உண்டாகியிருக்க வில்லையே! எனக் கூறியவுடன் "அவர்கள் அக்தாபுகளில் நின்றுமுள்ளவர்கள் இச்சிறப்புத் தங்கிய மாதத்தில் பல விடங்களுக்கும் சுற்றித் திரிபவர்கள் இவ்வழியாகப் போய்க் கொண்டிருக்கும் போது இம்மஜ்லிசின் மோப்பங்கண்டு இவ்விடம் விஜயம் செய்தார்கள் இதை விட அவர்களைப் பற்றி உங்களுக்குத் தேவையில்லை" என பதிலுரைத்தார்களாம்.

ஹளரத்தவர்களிடம் எமதூர் ஆசாமிகள் சிலர் ஓரிரவு சம்பாஷணை செய்து கொண்டிருக்கும் சமயம் கஃபாவின் சிறப்பைப் பற்றிய விஷயம் நடந்த கொண்டிருந்தது. அவ்வமயம் கஃபாவின் வடிவமானது வட்டமுடையதா அன்றேல் நான்கு சதுரமாகவுள்ளதாவென வினவ ஹளரத்தவர்கள் ஜத்புடைய ஹாலிலாகிச்சற்றே தாமதித்திருந்து கஃபாவின் வடிவத்தைக் காண அதிகமான அவாவுடையவர்களாக விருப்பதால் இதோ பாருங்களெனத் தங்களின் வலது கரத்தின் கலிமா விரலை உயர்த்திக் காண்பித்தார்களாம். சுப்ஹானல்லாஹ்! அவ்விரலானது எப்போது முள்ளதைவிட இருமடங்கு பெருத்து நான்கு மூலையாகவும் அதில் ஒரு பிரகாசமும் காணப்பட்டவுடன் திடுக்கிடலாயினராம். உடனே ஹளரத்தவர்களும் அஸ்தஃபிருல் லா(ஹ்) வெனும் தவ்பாவின் வார்த்தையை சுமார் 50 விடுத்தத்திற்கு குறைவில்லாமல் மொழிந்தார்களாம். மேலும் ஹளரத்தவர்களுக்கு ஏதாவதொரு மஸ் அலாக்களில் சந்தேகம் ஜனித்தால் சில நிமிஷம்

வரை சிந்தனை செய்பவர்கள் போல் காணப்படும். உடனே நாமத்தைக் குறித்து இன்ன கிதாபின் இன்ன நம்பர் இன்ன வரியைப் பாருங்களெனச் சொல்வார்கள் அதன்படி பார்த்தால் எந்த விஷயம் சந்தேகமானதோ அவை காணப்படும். இது சம்பந்தமாகக் கேட்ட போது "சந்தேகமானவுடன் என்னை நான் நோட்டமிட்டால் என் நெஞ்சுக்கு நேரில் அந்தக் கிதாபின் பக்கத்தையும் வரியையும் நான் சந்தேகமற விளங்கும் வரை காட்டப் படுகிறதென பதிலுரைத்தார்கள்."

ஹளரத்தவர்களின் முலாகாதுக்குச் செல்பவர்கள் ஹளரத்தவர்களிடம் இன்ன விஷயத்தைப்பற்றிப் பேச வேண்டுமென மனனம் பண்ணிக் கொண்டுபோனால் அவர்களின் சுவாலுக்கு முன்பாக எந்த விஷயத்தை இவர்கள் எண்ணிப் போனார்களோ அவ்விஷயத்தையே கூறி அதற்கான ஜவாபைக் கூறுவதைக் கண்டு பிரமித்துவிடுவார்கள். மேலும் ஹஜ்ரத்தவர்கள் தங்களின் வபாத்துக்கு 6 மாதத்துக்கு முன்னிருந்தே தங்களின் மௌத்தைப் பற்றி இஷாறாவாகக் கூறிக் கொண்டே வந்தார்கள் அதில் ஒன்றாவது தங்களின் வபாத்துக்கு 24 நாட்களுக்கு முன் எமதூர் மதுரசா பைஜுல் பாக்கியாத்தின் முத்தவல்லியும் பிரபல குடும்பத்தினருமான ச.யி.மு. முஹம்மது அலி மர்ஹூம் அவர்களின் மௌத்தை முன்னிட்டு விஜயம் செய்து ஜனாசாத் தொழுகையையும் தொழுகவைத்து விட்டு சிலருடன் பேசிக் கொண்டிருக்கும் சமயத்தில் கூறியதாவது. "தீனுக்கு உபகாரியாகிய நல்ல மனிதர்களெல்லாம் இவ்வருடம் ஆண்டவன் பக்கல் மீண்டுவிட்டதால் நானும் நல்லவனாகவிருந்தால் இவ்வருடமே மௌத்தை அடைவேன்" என்றவுடன் பக்கத்திலிருந்தவர் தாங்கள் இவ்வமயம் கெட்ட மனிதராகவா இருந்து வருகிறீர்கள் அவ்வாறில்லா திருக்க இவ்வார்த்தைகளெல்லாம் ஏன் கூறுகிறீர்களென்றார். "நான் ஒரு நல்லவனாகவிருப்பது தங்களுக்குப் பிரியமில்லையா" எனக் கூறினார்கள். அதேபோல் அவ்வருடமே ஆண்டவன் பக்கல் மீண்டு விட்டார்கள்.

ஹளரத்தவர்களின் வபாத்துக்குப் பிறகு ஹளரத்தவர் களை ஒருவர் கனவில் கண்டு தாங்கள் இவ்வுலகத்தை விட்டுச்

சென்றபின் எவ்விடத்தில் இருந்துக் கொண்டிருக்கிறீர்களென்று கேட்டதற்கு "இன்னல் முத்தகீன ஃபீஜன்னாதிந் வநஹ்ர் ஃபீமக் அதிசித்கின் இன்தமலீகின் முக்ததிர்'' கருத்தாவது :- (தக்வாச் செய்பவர்கள் ஒதுங்கும் தலமானது சுவனலோகமும் அதிலுள்ள நீர்ச்சுனைகளும் அல்லாஹுத்த ஆலாவின் மெய்யான தானமுமாகும்) என்ற குர்ஆன் ஆயத்தையே ஓதிக் காண்பித்தார்களாம். அவர்களின் மேன்மை தங்கிய ரவ்ளாவில் போடப்பட்டருக்கும் மேற்போர்வையில் இவ்வாயத்தையே எழுதப்பட்டிருக்கிறது.

வேறொருவரும் ஹளரத்தவர்களைக் கனவில் கண்டு தாங்கள் இவ்வுல்கைவிட்டு மௌத்தை அடைந்து விட்டீர்களல்ல வாவென்று கேட்டதற்கு " அல்ஆரிபுலாயமூத்து அனாலாஅமூத்து'' (கருத்தாவது:- அல்லாஹுத்த ஆலாவை அறிந்தவர்கள் மௌத்தை அடைவதில்லை, நானும் மௌத்தாகவில்லை.) என்று பதிலிருத்தார்களாம்.

ஹளரத்தவர்களின் ஹயாத்திலேயே நிகழப்பட்டதும் வபாத்துக்குப் பின் காணப்பட்டதுமான எத்தனையோ விஷயங்கள் பலராலும் கூறப்பட்ட போதிலும் ஹளரத்தவர்களின் தகுதியை என்போன்றார் விளங்குவதற்கு இவ்வளவே போதுமென நினைத்து விடுத்தனம். மேலும் அல்லாஹுத்த ஆலாவின் உண்மையான வலியாகவும் கிருபையே உருவாகவும் அல்லாஹுத்த ஆலாவை துதிப்பதும் அருமை நாயகம் (ஸல்) அவர்களைப் புகழுவதுமே தாங்கள் இவ்வுலகுக்கு வந்த கருத்தென்று சொல்பவர்களாகவும், சொற்பிரகாரம் நடப்பவர்களாகவும் கொடை வள்ளலென்று சாற்றுவதற்கு லாயக்குடையவர்களாகவும், எந்த ஹாலிலும் சதா ஆண்டவனின் தாத்து சிபத்துகளைப் பற்றி உபதேம் செய்பவர்களும் அதைக்கொண்டு பரவசமடைபவர்களும் அவனிலேயே குடியிருந்தவர்களும், செந்தாமரை மலர் போன்ற பாதத்தை யுடையவர்களும் விகார மற்றதும், மனதுக்கு ரம்மியத்தை யளிக்கக் கூடியதுமான திரேகத்தையுடைவர்களும், சாந்த குனத்தை வெளிப்படுத்திக் காட்டக் கூடியதும் பூரண மதியைப்

போன்ற ஜோதியைத் தரக்கூடியதுமான முகத்தழகு பொருந்தியவர்களும், மன்பதைகள் பேரானந்தத்தில் சொக்கும் படியான தொனியை யுடைவர்களுமான ஆரிபுபில்லா (ஹ்) ஆஷிக்குர்ரஸூல் மாஹிருல் உலூம் பஹ்ருல்ஹகாயிக் கன்ஸூத்தகாயிக் மௌலானா மௌலவி ஹாஜ்ஜில் ஹரமைன் ஹாபிஸ் முஹம்மது அப்துல் கரீம் வலியுல்லாஹ் (ரலி) அன்ஹூ அவர்கள் தங்களுடைய நாற்பத்தி ஐந்தாவது பிராயத்தில் தங்களுக் கேற்பட்டிருந்த ஜூரத்தின் கார்ணத்தினாலும் சூரிய வெப்பத்தாலேற்பட்ட சிறிய பாமைகளில் ஜலம் வெளிப்பட்டு காய்ந்து போனது போக முதுகின் மேல்பாகத்திலிருந்த மூன்று பாமைகளையும் நிவர்த்தி செய்து கொள்வான் வேண்டி மன்னார்குடியிலுள்ள வைத்திய சாலைக்குக் சென்றிருக்குங்கால் ஈசவி 1927 ம் ஆண்டு ஜூன் மாதம் 5 க்கு ஹிஜ்ரி 1345ம் ஆண்டு துல்ஹஜ் மாதம் 4 ந் தேதி ஞாயிற்றுக் கிழமை காலை மணி 6-30க்கு மேல்கண்ட சிரங்குகளை இலேசாக ஆபரேஷன் செய்யப்பட்டு பகல் மணி 1-30க்குப் பலவிதமான திக்ரும் ஸலாமும் மொழிவதுமாக விருந்து கடைசியான வார்த்தையாக “உக்ருஜ்” வெளிப்படு என்ற சொல்லுடன் தங்களது சிறு பிராயமுள்ள மூன்று ஆண் மகவையும், முதிர்ந்த வயதையெத்திய இரு சகோதர சகோதரிகளையும், கிழடு பாகத்தையெத்திய தங்களின் மாதாவையும், நடு நிலைமையுடைய பத்தினியையும், நூற்றுக்கு மேற்பட்ட தங்களின் மாணவர்களையும், எண்ணத்துலையாத சிஷ்யர்களையும், தாயற்ற சேய்களைப் போலும், கம்பமற்ற காகத்தைப் போலும், நீரற்ற மீனைப் போலும், பரிதவிக்க விட்டுவிட்டு இவ்வனித்திய மாய உலகை நீத்து என்றென்றும் அழிவுறாத ஆண்டவனின் சந்நிதி யடைந்தார்கள். (இன்னாலில் லாஹிவ இன்னாஇலைஹி ராஜிஊன்) உடனே அவ்விடமிருந்து புதக்குடிக்குக் கொண்டு வரப்பட்டு மறுநாள் திங்கட் கிழமை அவர்களின் அழகிய சிறப்புற்ற திருமேனியை அவ்வூர் பூறாவும் ஊர்வலஞ் செய்து 3000ம் ஜனங்களுக்கு மேற்பட்டவர்களால் தொழுகவிக்கப்பட்டு பகல் மணி 1-30க்கு மதுரஸாவுக்கு கிழக்காகவும் ரோட்டுக்கு மேற்காகவும் அமைந்துள்ள மதுரஸா

அன்னூருல் முஹம்மதிய்யுவின் காம்பவுண்டில் மேல்புறமாக மதுரஸாவுக்கு சமீபமாய் மறைக்கப்பட்டு அழகிய கோரி ஒன்றும் செய்யப்பட்டிருக்கிறது. தன் நாட்டத்தைக் கொண்டு நாடுபவனும் வலுப்ப முடையவனும் உலகின் கண் காணப்பட்ட வஸ்துகளை மறைக்கப்பட்டவனுமான அல்லாஹ் ஜல்லஷானஹுவத ஆலாவின் நாட்டமே முடிவடைந்தது.

## ஹளரத்தவர்களின் உருவக இலக்ஷணம்

மேன்மை தங்கிய ஹளரத்தவர்கள் சுமார் 5½ அடி உயரத்திற்குக் குறையாதவர்கள். பார்வைக்கு இலக்ஷணமான மாநிறமானவர்கள். மனிதர்களின் இலக்ஷணத்திற்குரிய பருமனையுடைவர்கள். பரந்த முகத்தையுடையவர்கள். மிகுதம் அடர்த்தியில்லாததும் போதிய நீளமுள்ளதுமான தாடியை யுடையவர்கள். சதாவும் டாக்காஸால் தலைப்பாகை அணிந்திருப் பவர்கள் விசாலமானதும் கெரண்டைக்கால் வரை நீள முள்ளது மான வெண் ஜுப்பாவை அணிபவர்கள் எக்காலமும் பாத தாமரையில் ஜோடணிபவர்களாகவு மிருந்தார்கள்.

## ஹளரத்தவர்களின் ஜீவிய காலத்தில் கேட்ட சுவால்களும் அதற்கவர்களால் கூறப்பட்ட ஜவாபுகளும்

**சுவால்:** (வினா) நற்பலனடையும் படியான ஓர் திக்றை எனக்குச் சொல்லிதர வேண்டுகிறேன்.

**ஜவாப் :** (விடை) நான் பலவிதமான செல்வங்களைச் சேகரம் செய்து வைக்கப்பட்ட இரகசியப் பொக்கிஷமாக விருப்பதால் தங்களிடத்திலுள்ள சுவாலென்ற திறவுகோலைக் கொண்டு திறந்து வேண்டியவற்றை எடுத்துக் கொள்வதில் எனக்கு அதிகமான பிரியமுண்டாகியிருக்கிறது.

**சுவால் : உலகத்தின்கண் குர்ஆனை ஓதுவது நன்மையில் மிகுத்ததா அன்றி ஸலவாத்தை ஓதுவது நன்மையில் மிகுத்தா?**

**ஜவாப் :** ஒரே இடையுள்ள இரண்டு வஸ்துவைப் பார்த்து எவ்வாறு ஒன்றைவிட ஒன்றைக் கூடுதலாகச் சொல்ல முடியாதோ அதைப்போல்தான் இதற்கும் ஜவாபாகும். ஏனெனில் நாயகம் (ஸல்) அவர்கள் திருவாய் மலர்ந் திருக்கிறார்கள் "நான் உங்கள்மீது முஹபத்துவைக்க நாடினால் நீங்கள் குர்ஆனை மிகுதம் ஓதுங்கள் அல்லா ஹூத்தாஆலா உங்கள் மீது முஹபத்துவைப்பதை நாடினால் ஸலவாத்தை மிகுதமாக ஓதுங்கள். அல்லாஹ்வைப் புகழ்வதே எனக்குப் பிரியம் என்னைப் புகழ்வது தான் அல்லாஹூத்த ஆலாவுக்குப் பிரியம்."

**சுவால்:** ஈமான் கொண்டுள்ள மூமினானவன் தனக்கு ஈமானைக் கொடுக்கும்படி துஆ கேட்கலாமா?

**ஜவாப் :** அவ்வாறு கேட்பது தெரியாத்தனமாகும். ஏனெனில் கெர்ப்பமுண்டாகியிருக்கும் பெண் பிள்ளை கெர்ப்பத்தை தரவேண்டுமெனக் கேட்பதற் கொப்பாகும். ஆனால் முடிவு வரை தரிப்படுத்தும்படி கேட்கலாம்.

**சுவால்:** அல்லாஹூத்த ஆலாவை அவரென்று பன்மையாகச் சொல்லலாமா?

**ஜவாப் :** சொல்லக் கூடாது. ஏனெனில் உலகத்தில் காணப்பட்ட வஸ்துகளெல்லாம் பலவித அனாசிர்களால் உண்டாக்கப் பட்டிருப்பது போலில்லாமல் அல்லாஹூத்த ஆலா தன்னைக் கொண்டே நிலைபாடான தனியவனாக விருப்பதால் அவரென்ற பன்மையையுபயோகிக்க வழியில்லை.

**சுவால் :** ஈத் என்ற பெருநாள் தொழுகையில் வழக்கத்துக்கு மேல் ஆறு தக்பீரை கூடுதலாகியிருப்பது எதற்காக?

**ஜவாப்** : ஈத் என்ற வார்த்தைக்கு மீளுவதென்று பொருளாகும். மீளுவதென்பது அஹதியத்தளவில் மீளுவதாகும். இன்சான் அஹதியத் தென்ற மர்த்தபாவிலிருந்து ஆறு விதமான மகாமாத்துகளைப் பொதிந்தவனாக வெளியாகி இருப்பதால் இவ்வாறு மகா மாத்துகளையும் பனா செய்து விட்டதற்கு அடையாளமாக அத் தொழுகையில் ஆறு தக்பீர்களைச் சேர்க்கப்பட்டிருக்கிறது.

**சுவால்:** அல்லாஹுத்த ஆலாவின் அஸ்மாக்களில் கோபமுடையவனென்ற அஸ்மாவும் ஒன்றாகி இருக்க இன்சானுக்கு அதை ஹறாமாக்கியதின் காரணமென்ன?

**ஜவாப்:** அல்லாஹுத்த ஆலாவுடைய சிபத்துகளில் மிகுதத்தை இன்சானுக்குக் கொடுக்கப்பட்டிருந்தாலும் கோபமென்ற சிபத்தானது வேறு யெவற்கும் பாத்தியமில்லாமல் ஆண்டவனுக்கு மட்டிலும் சொந்தமானதாகவிருக்கும். எதுபோலெனில் ஒருவன் ஹயாத்துடனிருந்து தன் பெண் ஜாதியை தலாக்குச் சொல்லாமலிக்குங் காலமட்டும் அவன் சம்மதப்பட்ட போதிலும் அவளின் வேறுயெவற்கும் பாத்தியதையில்லாமல் அவனுக்கு மட்டில் சொந்தமாக்கப் பட்டிருப்பது போலாகும்.

**சுவால்:** பாங்கு (அதான்) சொல்பவர்களுக்கு சுவர்க்கம் வாஜிபென்று பிக்ஹு கிதாப்களில் வந்திருக்கிறதே அவ்வாறாயின் ஒரு மனிதன் பாங்குமட்டில் சொல்லிக் கொண்டிருந்தால் போதுமாக இருக்க ஏன் தொழுக வேண்டும்?

**ஜவாப்:** பாங்கு சொல்பவர்களுக்கு சுவர்க்க லோகம் வாஜிபென்று வந்திருப்பது உண்மையே. ஆனால் அவர்கள் எவ்வாறிருக்க வேண்டுமென்பதற்கு ஒன்று கூறுகிறேன். அதாவது நாயகம் (ஸல்) அவர்களின் காலத்தில் இரு கண்களும் விளங்காத ஒர் மனிதரை பாங்கு சொல்வதற்காக நியமித்திருந்தார்கள். அவர்களை நியமித்திருப்பதின் இரகசியத்தை அறிவதற்காக ஸய்யிதனா அலி ரலியல்லா(ஹ்) அன்ஹு அவர்கள் ஒரிரவு தஹஜ்ஜத்தின் வக்தில்

பள்ளிவாசலுக்குச் சென்று பாங்கு சொல்பவரைக் கண்டவுடன் அவரைக் காணாதவர்கள் போல் இப்பள்ளி வாசலுக்கு இரு கண்களும் குருடாக இருப்பவரைப் பாங்கு சொல்வதற்கு நியமித்திருப்பதால் இதுவரை பஜ்ரின் வக்துக்கு பாங்கு சொல்லாமலிருக்கிறார். சூரியன் வெளியாக வேண்டிய நேரம் சமீபித்துவிட்டதே எனக் கூறிக் கொண்டு அன்னவர்களை நெருங்கி பாங்கு சொல்லுங்களெனக்கூற அவர்கள் ஏன் தாங்கள் வீணாகத் கூச்சல் போடுகிறீர்கள் பாங்கு சொல்வதற்குள்ளவக்தை நான் அறிவேனெனக் கூறக்கேட்டு உங்களுக்கு நேத்திரம் விளங்காமலிருப்பதாலல்லவா நேரம் விளங்கவில்லையெனக் கூறினார்கள். எனக்கு வெளித்தோற்ற நேத்திரம் விளங்கா விட்டாலும் அர்ஷில் பாங்கு சொல்லப்படும் சப்தம் என் கல்புக்கு கேட்ட பின் பாங்கு சொல்வதுதான் எனக்கு விளங்கிய நேரமாகு மெனக் கூறினார்கள். இவ்வாறு தன்மையை அடைந்தவர்களுக்குத் தான் சுவர்க்கமே தவிர மற்றவர்களுக்கல்லவாக விருப்பதால் இத்தகுதியை அடைவதற்கு கட்டாயம் தொழுதே தீரவேண்டும் மேலும் தொழுகையானது அப்தியத்தின் தன்மையை வெளிப் படுத்திக் காட்டக்கூடிய ஓர் சாக்ஷியைப் போலிருப்பதால் எவன் தொழுகவில்லையோ அவன் செய்கையில் தன்னை ரப்பென்று தாவாச் செய்கிறானென்றே சொல்லலாம்.

**சுவால்:** வலிமார்களில் சிலர் ஷரீ அத்தைப் பேணாதவர்களாகக் காணப்படுகிறார்களே அவர்களை ஏன் வெறுக்கக் கூடாது?

**ஜவாப்:** வலிமார்கள் ஷரீ அத்துக்கு மாற்றமாக நடக்கமாட்டார்கள். அவர்களின் நடத்தையானது மாற்றமாகக் காணப்படுவது காணுபவர்களின் விளங்காத்தனமாகும். ஏனெனில் "ஷர:" என்ற எழுத்தை பின்புறத்திலிருந்து வாசித்தால் "அர்ஷ்" என்ற எழுத்தாகுவதால் அர்ஷின் இரகசியத்தை யறிந்தவர்கள் ஷரீ அத்துக்குள்ள இரகசியத்தை விளங்கியே நடப்பார்கள்.

**சுவால்:** மக்கமா நகரத்திலுள்ள பள்ளிகளில் க.:பாவில் தொழுவது மேலென்றும், அதிலும் முந்தின ஜமா அத்தில் தொழுவது

மேலென்றும் வந்திருப்பதின் கருத்தென்ன?

**ஜவாப்:** அவற்றில் சில இரகசியங்களிருக்கிறது. அதாவது ஓர் நியாயாதிபதியிடம் நம்மின் காரியத்தைச் சொல்லி வெற்றியடை வதற்காக ஓர் தேர்ந்த வக்கீலைத் தேடுவது போல் நம்மின் தொழுகையை அல்லாஹுத்த ஆலாவால் ஒப்புக் கொள்ளப் படுவதற்கு நல்ல இமாமைத் தேடவேண்டும்; மேலும் கஃபாவில் தொழுகைவைக்கும் இமாம்கள் கல்வியில் தேர்ந்தவர்களாக விருப்பதுடன் ஒவ்வாரு நாளின் முந்தின ஜமா அத்திற்கும் குத்புஜ்ஜமானவர்கள் தொழுகைக்கு விஜயம் செய்வதால் கட்டாயம் அல்லா ஹுத்தஆலாவால் அதில் தொழுதவர்களின் தொழுகையெல்லாம் ஒப்புக் கொள்ளப் படுகிறதென்பதில் சந்தேகமில்லை. நாங்கள் சென்றிருக்கும் சமயத்தில் அன்னவர் களைக் கண்டு வஸீலாத் தேடவேண்டுமென எண்ணி மிகுந்த பிரயாஸையுடன் ஒருவரைக் கண்டு விசாரித்தேன் அவர்கள் கூறியதாவது: பாங்கு சொல்லிக் கொஞ்ச நேரத்திக்குப்பின் அவர்கள் வருவார்கள் அவர்களோடு இரு புரத்திலுமாக இருவர் வருவார்கள் ஹரத்தில் வந்தவுடன் தங்களின் பாதரக்ஷையை கழட்டிவிட்டு உள்ளில் சென்றபின் பின்னால் வருபவர்கள் அதனை எடுத்துக் கொண்டு போவார்கள். குத்பவர்களின் இரு பக்கலிலுமாக இருவரும் குந்திக் கொள்வார்கள். இதுவே அன்னவர்களுக்குள்ள அடையாளங் களாகுமெனச் சொல்லக் கேட்டு அதன்படி கவனித்து அன்னவர்களைக் கண்டு நஸீகத்துக்களைக் கேட்டுக் கொண்டோம்.

ஹளரத்தவர்களிடம் தொழுகையில்லாதிருந்த ஒரு மஸ்தானைக் கொண்டு வந்து இவர் பள்ளிவாயலிலேயே இருந்துக் கொண்டு தொழுகாமலிருந்து வருகிறார். கேட்பதற்கும் பதிலுரைக்கா திருக்கிறாரெனச் சொன்னவுடன் ஹளரத்தவர்கள் அன்னவரை நோக்கித், தாங்கள் எந்த மத்ஹபைச் சேர்ந்தவர் களெனக் கேட்க, அன்னவர் மத்ஹபில் இருக்க வேண்டியது அவசியமோ வெனக்கேட்டார். மறுதடவையாகத் தாங்கள் எந்தத் தரீக்கை யுடையவர்களெனக் கேட்டார்கள். அதற்கும் அன்னவர்

ஒரு தரீக்கில் இருக்க வேண்டியது என்ன அவசியமெனக் கேட்டவுடன் தாங்கள் போகலாம் ஒருவருக்கும் சொந்தமில்லாத மாடு போலிருப்பதால் உங்களிஷ்டத்துக்கு நடந்து பலராலுந் துன்பமடைவீர்கள். மதுஹபிலும் தரீக்கிலுமிருப்பது ஒருவ்ருக்குச் சொந்தமானது போலாகுமென்றார்கள்.

ஹளரத்தவர்களிடம் ஒருவரைப் பற்றி அன்னவர் நலமான மனிதராக விருக்கிறாரெனச் சொன்னபோது அவரிடம் எவ்வித நன்மையைக் கண்டீர்களென்றார்கள். அவர்கள் எவரிடத்தும் எதைப் பற்றியும் கேட்காதவர்க ளாகவும் எதைப் பற்றிக் கேட்டாலும் பதிலுரைக்காதவர்களாகவ்ும் தன் நப்ஸைப் பேணிக் கொண்டவர்களாகவுமிருக்கிறார்களெனக் கூறினார்கள். ஆனால் இவைகளைக் கொண்டு ஒரு மனிதரை நல்லவரென்று சொல்ல முடியாது ஏனெனில் அவர்களை விட நாம் தற்போது சாய்ந்து கொண்டிருக்கும் கல் சுவரானது மேலானதாகவிருக்கும். மேற்சொல்லிய குணங்களெல்லாம் இச்சுவற்றுக்குமுண்டு ஆனால் ஆண்டவன் மனிதர்களை இவ்வாறிருப்பதற்காகப் படைக்க வில்லை தான் பலனையடைவதோடு பிறருக்கும் உபகாரம் செய்ய வேண்டியவர்களாகவே படைத்திருக்கிறானென்றார்கள்.

ஹளரத்தவர்கள் எமதூரில் மாதம் மூன்று இரவுகளில் உபதேசம் செய்யுங் காலங்களில் மூன்று இரவிலும் ஒரு ஆயத்திற்கே அர்த்தம் செய்து உபதேசம் செய்பவர்களாக விருந்தார்கள். ஓரிரவு “வல்அஸ்ரி” என்றதற்கு உருமாலை முறுக்கிக் காட்டி பிழிவதின் மீது சத்தியமாக என்று ஆரம்பஞ் செய்து உபதேசம் செய்தார்கள். அன்று மாலை எமதூரிலுள்ள அரபிக் கல்வி பயின்ற ஒருவர் தாங்கள் இன்றிரவில் செய்த அர்த்தமானது எந்தத் தப்சீரில் வருகிறதெனக் கேட்டார். ஹளரத்தவர்கள் எந்தத் தப்சீரில் வர வில்லையென வினவினார்கள். அன்னவர் தாம் சுமார் 6-7 தப்சீர் வரை பார்த்ததாகவும் அவைகளில் இவ்வாறு பொருள் எழுதப்படவில்லையென்றும் சொன்னார். தாங்கள் பார்த்ததோடு தப்சீர்கள் முடிவடைந்து விடவில்லை

ஆகையால் பாக்கியுள் எதையும் பார்வையிட்டபின் கேளுங்களெனக் கூறிவிட்டு அல்லாஹுத்த அலாவின் உதவியைக் கொண்டு இவ்வாயத்துக்கு 43 அர்த்தம் வரை எனக்கு ஞாபகத்திலிருக்கிறது. (இன்ஷா அல்லாஹ்) சமயம் வந்தால் கூறுகிறேனென்றார்கள்.

**சுவால்:** (ஹளரத்தவர்களிடம்) கஃபத்துல்லாவின் சுவற்றில் வைக்கப்பட்டிருக்கும் "ஹஜ்ருல் அஸ்வத்" என்ற கல்லை முத்தமிடுவதை சுன்னத்தாக ஆக்கப்பட்டிருப்பது எதற்காக?

**ஜவாப்:** அக்கல்லை முத்தமிடுவதற்குப் பல காரணங்களிலிருந்தாலும் சிலதைக் கூறுகிறேன். 1.வது அக்கல்லானது மேலுலகத்திலிருந்து வந்த கல்லானதால் அதற்கு இவ்வுலகத்தார் மரியாதை செய்ய வேண்டியதுதான், என்பதற்காக முத்தமிடுவது; 2-வது சாதாரணக் கல்லுகளை விட விஷத்தை எடுக்கக்கூடிய விஷக்கல்லுக்கு மனிதர்களிடத்தில் மரியாதையிருப்பதால் இக்கல்லானது பாபங்களை எடுத்துக் கொள்ளக் கூடியதாக அமைந்திருப்பதற்காக முத்தமிடுவது. 3வது நமது பாவா ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களை சுவர்க்கத்திலுள்ள ஓர் மரத்தண்டையில் நெருங்காமல் பாது காவலுக்காக நியமிக்கப்பட்ட மலக்கானவர் தன் காரியத்தைக் கவனிக்காமல் இப்லீசிடம் ஏமாந்து போய்விட்டதால் அன்னவரைக் கல்ரூபமாக்கப்பட்டு கீழுலகத்துக்கு அனுப்பப்பட்டதாக விருப்பதால் அதனைக் கூர்ந்து நோக்குபவர்களுக்கு அன்னவர்களின் கோலமே புலப்படுவதால் நாம் இவ்வுலகுக்கு வருகவும் நபிமார்களும் வலிமார்களும் உண்டாகவும் காரணமான வராகவுமிருப்பதால் அன்னவரைக் கண்டவுடன் உள்ளன்பு பொங்கி முத்தமிட வேண்டியதாக விருக்கிறதென ஆரிபீன்கள் கூறுகிறார்கள்.

**சுவால்:** இறந்தவர்களை கபுரில் மலக்குகள் சுவால் செய்வது அரபிப் பாஷையைக் கொண்டன்பதாகச் சொல்கிறார்களே அரபி தெரியாதவர்களைக் கேட்டால் அவர்கள் எவ்வாறு பதிலுரைப்பார்கள்?

**ஜவாப்:** இறந்த பிற்பாடு சேரக்கூடிய இடமானது'பர்ஜக்' நடு உலகமாக விருப்பதால் அவ்வுலகக் காரியாதிகள் இவ்வுலகுக்கு மாற்றமாக விருக்கிறது பூத உடலுடன் தோற்றப் படக்கூடியவை சூட்சம உடலுடன் காணப்படும். அவ்விடத்திய விஷயங் களெல்லாம் ரூஹின் சம்பந்தமுடையதாகவிருக்கும். மானிடர் களுக்குரிய ரூஹுகள் அனைத்தும் ஒன்றாகவிருப்பதால் ரூஹின் பாஷையாகிய சுரியானிப் பாஷையிலேயே கேட்கப்படு மாதலால் இத்னை விளங்காத ரூஹுகள் ஒன்றுமில்லை. ஆனால் அரபியில் சொல்வதைப் போலில்லாமல் ஒரே வார்த்தையில் சகல கேள்வி களும் பொதிந்ததாகக் கேட்கப்படும் அதாவது மலக்குகள் "மராஜ்ஹு" வென்று கேட்டவுடன் கேள்விக்குப் பதிலுரைக்கத் தத்துவம் பெற்ற மூமின் "மராத் அஜீர்ஹு" வென்ற பதிலைச் சொல்வான் இயலாதவன் கெதி அதோகெதியாய்விடும்.

**சுவால்:** இறந்தவர்களுக்காக ஓதும் பாத்திஹாவில் யாஸீன் சூரத்தை ஓதுவதின் இரகசியமென்ன?

**ஜவாப்:** உலகம் தோன்றியதிலிருந்து நாயகம் (ஸல்) அவர்கள் காலம் வரை கேள்வியில்லாமல் சுவர்க்கம் புகுபவர்களைப் பலரைச் சொல்லியிருப்பதில் யாஸீன் என்ற நாமங்கொண்டவரும் ஒருவராவார். இவர் ஈசா (அலை) அவர்களின் சஹாபாக் களிலுள்ளவர். நம்மால் ஓதப்படும் கபுறாளிகளையும் கேள்வியில் லாமல் சுவர்க்கஞ் செல்லும் யாஸீன் சாஹிபைப்போல் ஆக்கி வைத்துவிட வேண்டுமென்று ஆண்டவனிடம் கேட்பதாகும். இக்கருத்தைக் கொண்டு ஓதாவிட்டால் யாஸீன் ஓதிய அஸல் கருத்து கிடைக்காமல் போய்விடும்.

மேலும் எத்தனையோ கேள்விகளுக்கு ஹஜ்ரத்தவர்கள் கூறிய பதில்கள் குறித்து வைக்கப்படாமலும் ஞாபகத்திலில்லா மலுமாய் விட்டதால் இவ்வளவுடன் இச்சரிதையை முடிக்கலா னேன். அல்லா(ஹ்) ஜல்லஷானஹுவத ஆலா நம்மனைவர் களுக்கும் தன்னுடைய நபிமார்களின் சிறப்பைக் கொண்டும் வலிமார்களின் பொருட்டைக் கொண்டும் இச்சரிதையின் காரண

கர்த்தவாகிய ஆரிபுபில்லாஹ் ஆஷிகுற்றஸூல் பஹ்ருல்ஹகாயிக் மௌலானா மௌலவி ஹாஜி ஹாபிஸ் முஹம்மது அப்துல் கரீம் வலியுல்லாஹ் அவர்களின் துஆவைக் கொண்டும் இரு உலகிலும் நற்பலனளிப்பானாக. ஆமீன். ஆமீன். ஆமீன்.

## ஹிஜ்ரி 1345ம் வருடம் ஷஃபான் மாதம் 15 தேதியில் எமதூர் பெரியபள்ளியில் ஹளரத்தவர்களால் செய்யப்பட்ட உபதேசம்.

(ஆரம்பம்)

அல்ஹம்துலில்லாஹி நஹ்மதுஹூவநஸ்த்தஈனுஹூ வநஸ்த்தஃபிருஹூ வநு உமினுபிஹி வநத்தவக்கலு அலைஹி வநஊது பில்லாஹி மின்ஷுரூரி அன்புஸினா வமின் ஸய்யி ஆத்தி அஃமாலினா மன்ய்யஹ்தி ஹில்லாஹூ பலாமுளில் லல(ஹூ) வமன்ய்யள்லில்ஹூ பலாஹாதியல (ஹூ) வநஷ் ஹதுஅன்லா இலாஹ இல்லல்லாஹூ வஹ்தஹூ லாஷரீ கலஹூ வநஷ்ஹது அன்னஸய்யிதனா வநபிய்யினா வமௌலானா முஹம்மதின் ஸல்லல்லாஹூ அலைஹிவஸல்லம் வஅலா ஆலிஹி வஸஹ்பிஹி அஜ்மஈன்.

(ஸல்லல்லாஹூ அலா முஹம்மது ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் 7 விடுத்தம்)

ஆயத் "இன்னல்லாஹ வமலாயிகதஹூயு ஸல்லூன அலன்னபிய்யி யா அய்யுஹல்லதீன ஆமனூஸல்லு அலைஹி வஸல்லிமு தஸ்லீமா" (சுப்ஹானல்லாஹி வல்ஹம்துலில் லாஹி வலாஇலாஹ இல்லல்லாஹூ வல்லாஹூ அக்பர் 7 விடுத்தம்)

மேலே சொல்லப்பட்ட ஆயத்தானது வாக்கியத்தில் சிறிதாகக் காணப்பட்ட போதிலும் இதில் பொதிந்துள்ள அர்த்த

மானது வருடக் கணக்காக உபதேசம் செய்தாலும் முடிவடைந்து போகுமெனச் சொல்ல முடியாததாக இருந்து வருகிறதால் இவ்விடத்தில் நமக்கு வேண்டிய தப்ஸீரைக் கொண்டு முடித்துக் கொள்வோம். இந்த ஆயத்தில் ஆண்டவனுக்கும் அருமை நாயகம் (ஸல்) அவர்களுக்குமுள்ள சேர்மானத்தையும் நாயகத்துக்கும் நமக்குமுள்ள சேர்மானத்தையும் கூறப்பட்டிருக்கிறது. ஆண்டவனுக்கும் நாயகத்துக்குமுள்ள சேர்மானத்தை இவ்விடத்தில் விவரிக்க வேண்டியதில்லை யாதலால் நாயகத்திற்கும் நமக்குமுள்ள நெருங்கிய சேர்மானத்தைப் பற்றி மட்டில் பரக்கத்திற்காக சிறிதளவு கூறிவிட்டு நம்மை முன்னோக்கி வந்து கொண்டிருக்கும் நோன்பைப் பற்றிய பயானை ஆரம்பஞ் செய்து கொள்வோம். (இன்ஷா அல்லாஹ்)

அல்லா(ஹ்) ஜல்லஷான ஹுவத ஆலா நம்மை அறை கூவி நீங்கள் நாயகம் (ஸல்) அவர்களின் மீது ஸலவாத்தைச் சொல்லுங்க ளென்பதாகச் சொல்லி யிருப்பதுவே அவன் நம்மீது கொண்டுள்ள அன்பை வெளிப்படுத்துகின்றது. மேலும் எதற்காக நம்மீது இந்த அம்ரை சாட்டியுள்ளானென்பதை நோட்டமிட்டால் நாம் அந்த நாயகம் (ஸல்) அவர்களை இவ்வுலகிலேயே சந்திக்க வேண்டுமென்றும் அதைக் கொண்டே மஹ்ஷரில் ஷபா அத்துக் குரியவர்களாகிவிட வேண்டுமென்பதையும் எச்சரிக்கை செய்ததாகத் தெரியவருகிறது. ஆனால் நாயகம் (ஸல்) அவர்கள் மதீனா முனவ்வறாவில் 1300 வருடங்களுக்கு முன் தபனாய் விட்டார்களே இக்காலத்தில் எவ்வாறு சந்திக்க முடியுமெனக் கேட்கலாம் சந்திப்பதென்பது மதீனாவில் வெளியாகியிருந்த அவர்களின் பூத உடம்பையல்ல. ஏனெனில் நாயகம் (ஸல்) அவர்களுக்கு மதீனாவில் தோன்றிய கோலம் ஒன்று மட்டுமே உள்ளதென முடிவு கட்ட முடியாமல் வித்ரியாவில் "எந்தவிதமாக ஆண்டவனின் அஸ்மாக்களின் எண்ணிக்கையைக் கூற முடியாதோ அதேபோல் நாயகம் (ஸல்) அவர்களின் கோலத்தையும் மட்டிட முடியாதென்பதாகக் கூறியிருக்கிறார்கள். மேலும் நாயகம் (ஸல்) அவர்களின் பாதமானது பூமியில் பதியாதிருந்ததாகவும் சொல்லப்பட்டிருப்பதைக் கொண்டு வெளிரங்கத்தில் காணப்பட்ட

உஜூது ஒன்றேதான் இருந்ததெனக் கூற முடியாமலிருப்பதால் அவர்களின் மீது ஸலவாத்து ஓதச் சொன்னது சந்திப்பதற்காகவே இருக்கு மெனத் தெரியவருகிறது.

குர்ஆனில் நாயகம் (ஸல்) அவர்களை ஆண்டவன் விளக்கென்பதாகப் புகழ்ந்திருப்பதை நோக்குங்கால் நம்மை ஸலவாத்து ஓதச் சொன்னதின் கருத்து ஒருவாறு இஷாறாவாகத் தெரியவருகிறது. அதாவது இருளிலிருப்பவர்கள் ஒரு வஸ்துவை விளங்கிக் கொள்வதற்கு விளக்கானது அவசியமானதாக இருப்பது போல் நாமெல்லாம் நம்மை எங்கிருந்தோம் எங்கு வந்திருக் கிறோம். எவ்விடத்துக்குச் செல்வோம். நாம் யார், எந்த இனத்தைச் சேர்ந்தவன், என்பதை விளங்கிக் கொள்ள வேண்டிய கடமையைச் சுமந்தவர்களாக விருந்தும் அதனை விளங்கிக் கொள்வதற்கு போதிய மனத்தெளி வில்லாதவர்களாகத் தத்தளித்துக் கொண்டிருப்பதால் நம்மை நாம் அறிந்து கொள்வதற்கு நாயகம் என்ற விளக்கைப் பெற்றுக் கொள்ள வேண்டிய அவசிய முடையவர்களாகவே இருக்கின்றோம். அதனை நாம் பெற்றுக் கொள்வதற்கு அவர்களின் மீது ஸலவாத்து ஓதுவதே சரியான வழியாகத் தோன்றுகிறது. ஆனால் ஸலவாத்து ஓதுவதைக் கொண்டு கல்பு தெளிவடைந்து விடுமோ வென்ற சந்தேகத்துக் கிடமில்லாமல் ஸலவாத்தி லிருக்கப்பட்ட (ஸாதானது) நான் உன்னுடைய கல்பை ஸபாவாக்கு வேனென்றும், (லாமானது) ஸபாவை (தெளிவை) யடைந்தவன் லிகா வென்ற தன்னுடைய தரிசனையையும், ஆண்டவனுடைய தரிசனையையும் பெற்றுக் கொள்வான் என்பதாக உபதேசம் செய்வதாகவும் அமைந் திருக்கிறது. நாயகம் (ஸல்) அவர்களை இவ்வுலகில் சந்திக்காதவன் மறு உலகில் சந்திக்க முடியாதோவென நினைக்கலாம். ஆனால் யார் இவ்வுலகில் மனக்கண் குருடராகி இருந்தார்களோ அவர்கள் மறு உலகிலும் குருடராகவே இருப்பார்களென்று வந்திருப்பதால் இதைக் கொண்டு காண முடியாதென்றே தெரியவருகிறது.

நம்மில் ஒருவர் நான் ஆயிரக்கணக்காக ஸலவாத்து ஓதியிருக்கிறேன், ஆனால் தாங்கள் சொல்வது போல் யான் ஒரு

விடுத்தமாகிலும் அந்த நாயகம் (ஸல்) அவர்களைச் சந்திக்கவில்லையே என்று கேட்கலாம். அவ்வாறாயின் ஸலவாத்து ஓதியவரின் குறைத்தலேயல்லாது ஸலவாத்தின் மீதில் சந்தேமில்லை. ஏனெனில் ஸலவாத்து ஓதுவது இரண்டு வகையாகவிருக்கும். ஒன்றாவது நாயகம் (ஸல்) அவர்களின் உண்மைத் தத்துவங்களை அறிந்து கொள்வது. இரண்டாவது அவர்களை விளங்கியதைக் கொண்டு தன்னில் பொங்கியெழும் பேரானந்தத்தால் நாவில் நின்றும் வெளியாகும் ஸலவாத்தாகும். உண்மைத் தத்துவங்களை அறிந்து கொள்வதென்பது நாம் மேலே சொல்லியது போல் அவர்களின் மர்த்தபாக்களை அறிந்து கொள்வதாகும். அவர்களின் மர்த்தபாக்களை அறிந்துகொள்ள வேண்டுமென்பது நம்மில் அனேகருக்கு விளங்காதிருக்கலா மாகையால் அதனை ஜாடையாகச் சொல்கிறேன் விளங்கிக் கொள்ளுங்கள். நாயகம் (ஸல்) அவர்கள் திருவாய் மலர்ந்திருக் கிறார்கள் "நான் அல்லாஹ்வுடைய நூரில் நின்றுமாயிருக்கும் வஸ்துக்களடங்கலும் என்னுடைய நூரில் நின்றுமாயிருக்கும்" என்பதாக, இப்போது நீங்கள் சிந்தனை செய்து பாருங்கள். நாயகமவர்களை எத்தனை கோலத்தைக் கொண்டு மட்டுப் படுத்த முடியுமென்பதாக (சுப்ஹானல்லாஹிவல் — 7 விடுத்தம்)

நாமும் நமக்குக் காணப்படும் வஸ்துகளும் அந்த நாயகம் (ஸல்) அவர்களின் நூராகிய நூரு முஹம்மத் என்பதாக நாம் விளங்கிக் கொண்டதால் மற்றவர்களுக்கும் நமக்கும் எவ்வளவு நெருங்கிய சம்பந்தம் உண்டென்பதைத் தெரிந்து கொண்ட பின் நம்மின் உஜூதில் நின்றும் ஓர் துண்டாகிய ஒரு இன்ஸான் பசிப்பிணியால் நோவுற்று நம்மிடம் ஏதாவது கேட்டால் இல்லை என்ற பதில் சொல்ல நாவெழுமா? அவ்வாறு சொல்பவன் தன்னை அறிந்தவனாவானா? மேலும் இல்லை என்ற வார்த்தையானது மிடுமையாளரின் வார்த்தையென்றும் அதனை மனிதர்கள் பேசுவது அழகல்லவென்றும் நாயகம் (ஸல்) அவர்கள் மொழிந் திருப்பதுடன் தங்களின் வாழ் நாட்களில் ஆண்டவன் இரண்டுண்டோ வென்பதற்கு மட்டில் இல்லை என்பதைக் கூறுவார்களேயொழிய வேறு வார்த்தைகளுக்கு இல்லையென்ற

வார்த்தையைக் கூறுமாட்டார்களாம். ஓர் நாள் தினம் ஆயிஷா (ரலி) அவர்களிடம் ஓர் முசாபரை அழைத்துக் கொண்டு போய் ஆயிஷா.வே இவருக்குக் கொடுக்கக் கூடிய வஸ்துகள் உண்டாவென வினவியபோது அவர்கள் இல்லை என்று கூறாமல், நாயகமே! அவர்களுக்கு லாயக்கில்லாத உப்பும், தண்ணீரும் உண்டாகி இருக்கிறதென பதிலுரைத்தார்களாம். இதைக் கொண்டு தெரியவருகிறதாவது நாயகத்தைப் பெற்றுக் கொள்ள வேண்டுமானால், நாயகத்தைச் சேரவேண்டிய வழியாகிய ஏழைகளின் ஹாஜத்தைத் தீர்த்து வைப்பதுடன் நாயகம் (ஸல்) அவர்களின் மீது அன்பு பூண்டவனாக ஸலவாத்து ஓதவேண்டும் அவ்வாறில்லாமல் தஸ்பீஹைப் பிடித்துக் கொண்டு மூலையில் உட்கார்ந்து ஆயிரக்கணக்காக ஓதிவிட்டு மனிதர்கள் மீது கொடூர குணம் படைத்தவனாக இருப்பது ஸலவாத்து ஓதியதாகாதென்பதை திட்டமாக மனதில் பதிவு செய்து கொள்ளுங்கள். நாம் இதனளவிலேயே பேசிக் கொண்டிருந்தால் நம்மின் கருத்தாகிய நோன்பின் பயானைச் சொல்ல முடியாதாகையால் அதனளவில் சென்று விடுவோம். (சுப்ஹானல்லாஹிவல் ...)

(மேன்மை தங்கிய ஹளரத்தவர்கள் தங்களின் ஒவ்வொரு மஜ்லிஸிலும் ஆரம்பத்தில் நாயகத்தின் சங்கைக்காக ஸலவாத்தின், மேல் சொன்ன ஆயத்தை ஓதி அதற்குச் சிறிதளவு பயான் செய்த பின் பயானை ஆரம்பிப்பதை சில காலமாக வழக்கப்படுத்தி வந்தார்கள். எமதூரிலேயே சுமார் 20 தடவைக்கு மேல் இவ்வாயத்துக்குப் புதிய புதிய தப்சீர் செய்து பயான் செய்துள்ளார்கள். த.ச. ஆக்கியோன்)

ஆயத்து "யா அய்யு ஹல்லதீன ஆமனூ குதிப அலைக்கு முஸ்ஸியாமு கமாகுதிப அலல்ல தீனமின் கப்லிகும் லஅல்லகும் தத்தகூன்" (சுப்ஹானல்லாஹிவல்.....)

லைலதுல் கத்ரென்றும், லைலதுல் பராஅத்தென்றும் அதாவது வலுப்பமுடைய இரவென்றும், விடுதலையுடைய இரவென்றுஞ் சொல்லப்படும். இரு இரவுகளைப் பற்றி நீங்கள்

எவ்வளவோ கேட்டிருப்பீர்களாதலால் இந்த கிஸ்ஸாக்களைப் பேச வேண்டிய தில்லை. அதிலொன்றாகிய இந்த இரவானது விடுதலையுடைய இரவாகவிருக்கும். விடுதலையென்பது வரக்கூடிய ஒரு வருஷத்திற்கு நடக்கவேண்டிய காரியங்களை ஆண்டவன் மலக்குகளிடம் சாட்டுகிறானென்பதாகச் சொல்கிறார்கள். அவ்வாறு விடுதலையடையும் இரவை வீண் காலமாக்காமல் ஒவ்வொருவர் களும் நல்ல அமல்களைச் செய்வதுடன் தங்களுக்கு வேண்டிய வைகளைப் பற்றி துஆ கேட்டுக் கொள்ள வேண்டும். ஏனெனில் துஆவானது (களாவென்ற) அஜலையும் தட்டிவைக்குமென நாயகம் (ஸல்) அவர்கள் மொழிந்துள்ளார்கள். ஆரிபீன்களில் சிலர் துஆ கேட்காதவர்களாக இருக்கிறார்கள். காரணம் தங்களுக்குத் தேவைப்படுபவைகளை ஆண்டவன் அறிந்தவனாக விருப்பதால் அதைப்பற்றி நாம் கேட்க வேண்டியதில்லையாம். ***முடிவாக துஆ கேட்க வேண்டியது தான் அடியார்களுக்குள்ள அதபாக இருக்கும்.*** ஏனெனில் ஆண்டவனுக்குள்ள பல அஸ்மாக்களில் 'ரஹ்மான்' என்பதுவும் ஒன்றாக விருப்பதால் ஒரு வகையில் இதற்குப் பொருள் தன்னிடம் கேட்காதவர்களிடத்தில் கடூரமான கோபமுடையவனென்பதாகச் சொல்லப் பட்டிருக்கிறது. இவ்விடத்தில் ஆண்டவன் தன் அடியார்கள் மீது எவ்வளவு அன்பு பூண்டுள்ளவனென்பதை யோசித்துப் பாருங்கள். இவ்விஷயத்தில் போய்க் கொண்டிருப்பதற்குப் போதிய நேரமில்லையாதால் அசல் பேச்சளவில் திரும்புவோம்.

சங்கைக்குறிய நோன்பைப் பற்றி, றஜபு மாதம் என்னுடைய உம்மத்துகளின் மாதமென்றும், ஷஃபான் மாதமானது என்னுடைய மாதமென்றும், ரமலான் மாதமானது ஆண்டவனுடைய மாதமென்றும் அருமை நாயகம் (ஸல்) அவர்கள் திருவாய் மொழிந்திருக்கிறார்கள். இம்மூன்று மாதங்களும் வருடத்தில் சிறப்புப் பெற்ற மாதங்களாகும். மேலும் இம்மூன்று மாதங்களிலும் எந்த மாதம் ரமலானுடைய மாதமென்று தெரிந்து கொள்ள முடியா வ்ண்ணம் நாயகம் (ஸல்) அவர்கள் அமல்களைச் செய்பவர்களாக யிருந்தார்கள். மேலும் ஆதம் அலைஹிஸ்ஸலாம்

அவர்களைப் படைப்பதற்காக மண் கொண்டுவரச் சொல்லி இஸ்றாயீல் (அலை) மண்ணெடுத்துக் கொண்டு வந்தது ரஜபு மாதம் ஒன்றாந் தேதியென்றும், அவைகளை குழைப்பதற்காகப் பல வித மழைகளைப் பொழிய வைத்து உருவம் செய்ய ஆரம்பித்தது ஷஃபான் மாதம் பத்தாந் தேதியென்றும், மலக்குகள் பலவித கோலங்களைச் செய்து ஆண்டவனிடம் காண்பிப்பதும், ஆண்டவன் அவைகள் சரியல்லவென்பதைக் கொண்டு அவைகளைக் குலைத்து விடுவதுமாகவிருந்து முடிவில் ஆண்டவனின் நாட்டத்திலிருந்த இந்த ரஹ்மானுடைய சூரத்தை தன் கையைக் கொண்டு படைத்து முடித்தது ரமலான் மாதமென்றுஞ் சொல்லப் பட்டிருக்கிறது. இவ்விடத்தில் ஆண்டவன் தன் கையைக் கொண்டு படைத்தானென்பதால் ஆண்டவனுக்கும் நமக்குள்ளது போல் இரு கரங்கள் உண்டாகியிருப்பதாக எண்ணி விட வேண்டாம். ஆண்டவன் இவ் வார்த்தையை விட்டும் பரிசுத்தமானவன், மேலும் ஆண்டவனின் சூரத்தில் படைத்தான் என்பதற்கு மடையர்கள் ஆண்டவனின் கோலம் நம்முடைய கோலத்தைப் போலிருக்குமென்று சொல்லி விடுகிறார்கள். அவ்வார்த்தை தெரியாத் தனமாகும், எவ்வாறெனில் வீதியில் செல்லும் பசுவின் கன்றை நோக்கி இவை யாருடைய கன்றென்பதாக வினவியதற்கு அப்துல்லாவுடைய கன்றென்றால் கன்றை அப்துல்லாஹ் ஈன்றதாக அர்த்தம் செய்து கொள்வது தவறாக விருப்பது போல் இக்கோலமே ரஹ்மானுடைய கோலமென்று கூறுவதும் தவறாகும். ஆனால் ஆண்டவன் நம்முடனேயே இருப்பதாகவும் நம்முடைய பிடரி நரம்பை விட நம்மிடம் நெருங்கியிருப்பதாகவும் சொல்லப் பட்டிருக்கிறதே என்றால் அதன் கருத்துகள் வேறாகும். சில நாதாக்கள் தங்களின் ஜத்புடைய ஹாலில் ஓ! ரஹ்மானே, நீ இல்லாது போனால் நானேது, நானில்லாது போனால் நீயேது என்பதாகச் சொன்னதில் கருத்தாவது நானில் லாமலென்பது மனிதரைப் படைக்காவிட்டால் ஆண்டவன் வெளியாகப் போவதில்லை யென்பதும் நீ இல்லாவிட்டால் நான் ஏதென்பது கல்குக்கு உஜூதே ஏதென்பதுமாகும். இவைகளைப் பற்றி விபரிப்பதற்கு சவகாசமில்லையாதால் இதனை நிறுத்திக்

கொள்வோம். இந்த நோன்பை நம் மீது ஏன் விதியாக்கப்பட்ட தென்பதற்குப் பல காரணங்களிருந்தாலும் :-

1-வது அல்லாஹ் ஜல்லாஷான ஹுவத ஆலாவுக்கு ஆயத்து குர்ஸியில் ஹய்யுன் கய்யூம், என்பதாக இரண்டு நாமங்கள் கூறப் பட்டிருக்கிறதல்லவா? அதற்கு ஊணில் லாதவன் உறக்கமில்லாதவன் என்பது அர்த்தமாகும். இந்த அர்த்தத்தைக் கவனித்து நம்மையும் நாம் கவனித்தால் நாம் நோன்பு வைக்க வேண்டிய கடமைப் பட்டவர்களா அல்லவாவென்பது புலப்படும். மேலும் மனிதன் ஆண்டவனுடைய பிரதிநிதியாக இருப்பதுடன் உஜூதின் புரத்தைக் கொண்டு அவனுடனேயே சேர்ந்தவனாகவு மிருக்கின்றான். உதாரணமாக ஆண்டவன் மஹ்பூப் சுப்ஹானி முஹிய் யித்தின் அப்துல் காதிர் ஜெய்லானி (ரலி) அவர்களிடத்தில் அபா எஜீதில் பிஸ்தாமி (ரலி) அவர் நானாகவும் நான் அவராகவும் ஆகியிருக்கிறோம். காரணமாவது; உலகத்திலுள்ள மற்ற கல்குகளெல்லாம் என்னால் படைக்கப்பட்ட வஸ்துகளின் மீது ஹாஜத்தாகுபவர்களாகவும் அவைகளையே தேடுபவர்களாகவும் ஆகியிருக்க அவர் மட்டிலும் என்னையே நாடுபவராகவும் என்னையே தேடுபவராகவும் ஆகியிருக்கிறா ரென்பதாகச் சொல்லியிருக்கிறான். இதைக் கொண்டு நாம் ஆண்டவனுடன் எவ்வளவு நெருக்கமுடையவர்களென்பது விளங்கியவுடன் மேல்சொன்ன ஹய்யுன் கய்யூம் என்ற அஸ்மாவில் சேர வேண்டியதற்காகவே வருடத்தில் ஒரு மாதம் பகலில் ஊண் இல்லாதவனாகவும், உறங்காதவன் என்பதற்காக அம்மாதம் இரவு காலங்களில் கண் விழித்து தராவீஹ் போன்ற அமல்களைச் செய்து கொள்ள வேண்டியதும் எவ்வளவு முக்கியமான காரியமென்பதைச் சிந்தனை செய்து பாருங்கள்.

2-வது நமது தகப்பனாராகிய ஆதம் (அலை) அவர்களை சுவர்க்க லோகத்திலுள்ள பழங்களில் ஒன்றை சாப்பிட வேண்டா மென ஆண்டவன் உத்தரவிட்டிருக்க (இவ்விடத்தில் பழமென்பது எதுவென்றும் எப்படி யென்றும் விபரிப்பதால் நேரம் போய்விடும் அதை நீக்கிக் கொள்வோம்.) அவ்வுத்திரவுக்கு மாற்றமாக

அதனைப் புசித்த பாபத்துக்கு கப்பாறாவாக (தெண்டமாக) வருடத்தில் ஒரு மாதம் பசித்திருக்கும்படி ஏற்பட்டது. ஆனால் ஆதம் (அலை) அவர்கள் செய்த தவறுக்கு நானா ஜவாப்தாரி யென்றால் நீயும் அக்காலத்தில் அவர்களின் முதுகந்தண்டில் அணுப்பிரமாண வஸ்துவாக அமைந்து தானிருந்தாய் அதனை தற்போது நீ மறந்துவிட்டாய். மேலும் உனக்காகிலும் நோன்புடன் முடிந்துவிட்டது. சாப்பிட முன்னின்றவர்களும் புசிக்கும்படி தூண்டியவர்களுமான பெண் பிள்ளைகளுக்கு நோன்புடன் மாதா மாதம் சோர்வடையும்படியான ஹய்ளென்ற ஓர் விதக் கஷ்டத்தையும் உண்டாக்கியிருப்பதை நீ பார்க்கவில்லையா இதைக் கொண்டு நோன்பு வைக்கும்படி உத்திரவு வந்தது செய்த பாவத்தை நிவர்த்தி செய்து கொள்வதற்கெனத் தெரியவருகிறது.

3-வது நாம் ஒவ்வொருவர்களும் செய்துவரும் நல்ல அமல்களை ஒன்று சேர்த்து சுவர்க்க லோகத்தில் ஓர் கட்டிடம் செய்து அமல் செய்தவனின் நாமத்தை சுவற்றில் எழுதப் பட்டிருக்கிறதென்றும், அக்கட்டிடத்துக்கு வாயிலானது நோன்பு வைப்பதாக விருக்குமென்றும், யார் நோன்பு வைக்கவில்லையோ அவர்கள் தன் கட்டிடத்தை வாசலில்லாமல் கட்டி முடித்த மடையர்களில் சேர்ந்தவர்களென்றுஞ் சொல்லப்பட்டிருகிறது. இவ்வார்த்தையில் சந்தேகம் கொள்ள வேண்டாம். ஏனெனில் அருமை நாயகம் (ஸல்) அவர்கள் மிஃறாஜுக்குச் சென்றிருக்கும் போது அங்கு சுவர்க்க லோகத்தில் சில கட்டிடங்கள் வாயிலில்லாமலிருப்பதைக் கண்டு விசாரித்து நோன்பு வைக்காதவன் அமலென்பதாகத் தெரிந்து சஹாபாக்களுக்குச் சொன்னதாக விருக்கும். எந்த மனிதன் நோன்பு வைக்க வில்லையோ அவன் கியாம நாளையில் தன்னுடைய கட்டிடத்துக்கு வாசலில்லாமலிருப்பதைக் கண்டு திகைப்படைந்து கஷ்டப்பட்டுத் திரிந்தலைந்து கொண்டிருப்பான். அவ்வாறு கஷ்டமடைய இஷ்டமிருந்தால் நோன்பை விட்டுவிடுங்கள் இல்லாவிட்டால் நோன்பு வைத்து கட்டிடத்துக்கு வாசல் வைத்துக் கொண்ட நாதாக்களின் கூட்டத்தில் சேர்ந்து கொள்ளுங்கள் (சுப்ஹானல்லாஹிவல் .....)

4-வது நோன்பானது ஷைத்தானைத் தடுக்கக்கூடிய ஓர் திரையாக விருக்குமென்றும், நோன்பு காலத்தில் ஷைத்தானை தளையப் பட்டு விடுகிறதென்றும், ஹதீதில் வந்திருப்பதால் தன்னை விட்டும் ஷைத்தானைத் தடுத்துக் கொள்ள வேண்டியவர்களடங்கலும் அவசியமாக நோன்பு வைத்துக் கொள்ள வேண்டும். ஷைத்தானென்பது இரண்டு வகையுடையதாக விருப்பதால் இவ்விடத்தில் சொல்லப்பட்டிருப்பது மனதின் ஜோதியைத் தடுக்கும் ஷைத்தானையாகும். மேலும் ஷைத்தான் மனிதர்களின் திரேகத்தில் இரத்தஞ் செல்லக்கூடிய விடங்களி லெல்லாம் சென்று வருகிறானென்று நாயகம் (ஸல்) அவர்கள் மொழிந்திருப்பதால் நோன்பைக் கொண்டு திரேகத்திலுள்ள கெட்ட இரத்தங்களெல்லாம் வற்றிப் போவதால் அவனுக்குரிய வாயில்கள் மூடப்பட்டுவிடுகிறதுடன் அவனைத் தடுத்துக் கொள்வதற்கு ஓர் ஆயுதமாகி விடுகிறது.

5-வது நாயகம் (ஸல்) அவர்கள் சஹாபாக்களை நோக்கி என் அருமை சஹாபக்களே! நீங்கள் வலிமா விருந்தருந்து வதற்காகப் பசித்திருங்களெனத் திருவாய் மலர்ந்திருக்கிறார்கள். இவ்விடத்தில் எந்த வலிமா பசியாறுவதற்கென்றும், எப்படிப் பசித்திருப்பதென்றும் விபரமாகச் சொல்லப்படவில்லை ரஸூல்மார்களும், நபிமார்களும் இவ்வுலகிற்கு விஜயம் தந்தது ஆண்டவனின் கலாமை எத்திவைப்பதற்கும், ஷரீ அத்தின் அஹ்காம்களை மனிதர்களுக்குச் சொல்லிக் காட்டவுமாகும். அவர்களுக்குப்பின் ஆரிபீன்களும், நபிமார்களின் அனந்தரக் காரரான உலமாக்களும், தோன்றியது ஆண்டவனுடைய கலாமிலும், நபிமார்களின் கலாமிலும், அடங்கியுருக்கும்படியான இரகசியங்களை எடுத்துச் சொல்வதற்காக விருக்குமெனச் சொல்லியிருப்பது போல் ஆரிபீன்கள் சொல்கிறார்கள். நாயகம் (ஸல்) அவர்கள் பசித்திருக்கச் சொன்னதானது நோன்பு வைக்கச் சொன்னதென்றும், வலிமாவென்றது கியாமநாளையில் நாயகத்தின் நிகாஹின் பொருட்டு செய்யப்படும் வலிமா வென்றும், இதற்காகவே இம்மாதத்துக்கு அல்லாஹ்வுடைய மாதமென்று சொல்லப்பட்டதென்றும், மேலும் இம்மாதத்துக்கு ஆண்டவனு

டைய அஸ்மாக்களில் ஒன்றாகிய ரமலான் என்ற நாமத்தை சூட்டப் பட்டிருக்கிறதென்றும் சொல்லி இருக்கிறார்கள். இந்த அஸ்மாவை அஸ்மாஉல் ஹுஸ்னாவில் காணப்படவில்லையே யென்று சந்தேகிக்கலாம். இந்த நாமமானது நம்மிடம் காணப்படும் அஸ்மாஉல் ஹுஸ்னாவில் காணப்படாவிட்டாலும் மலக்குகளால் சொல் லப்படும் 4000ம் அஸ்மாக்களில் ஒன்றாக இருக்கலாமோ அல்லது குர்ஆனில் மறைக்கப் பட்டிருப்பதாகச் சொல்லப்படும் அஸ்மாவாக இருக்கலாமோ? ஆண்டவன் தான் அறிவான். பார்த்தீர்களா? ஆண்டவனால் அளிக்கப்படும் வலிமாவுக்கு மாப்பிள்ளையாகிய நாயகமே விருந்தழைப்புக் கடிதமாகிய மேலே சொல்லப்பட்ட ஆயத்தைக் கொண்டு வந்து கொடுத்திருக்க நாம் எவ்வாறதனை அல்லத்தட்டுவ தென்பதை யோசித்துப் பாருங்கள்.

இக்காலத்தில் சிலரைப் பார்த்து ஏன் நோன்பு வைக்க வில்லையென்று கேட்டால் வீட்டில் நெல்லும் அரிசியும் உண்டாகியிருக்க ஏன் பட்டினியாகக் கிடக்க வேண்டுமென்று சொல்கிறார்கள். அவர்களுக்குச் சொல்கிறோம் உன்னுடைய ஊரிலுள்ள ஒருவர் உனக்கு விருந்தழைப்புக் கடிதம் கொடுத்து நீ அவர் வாசலண்டையில் போய் கூட்டமாகயிருக்கிறதென்றோ தயாராகவில்லையென்றோ இரண்டு மூன்று மணி நேரம் வரை பசியுடன் காத்திருக்கவில்லையா? அவ்வாறில்லாமல் வீட்டுக்குப் போய்விட்டால் அன்னவரின் மனஸ்தாபம் ஏற்படுமென்றும் சொல்கின்றாயே. அவர் உனக்கு உயிரைக் கொடுத்தவரா? அன்றேல் உடலைக் கொடுத்தவரா? ஒன்று மில்லாதிருப்பவரின் அழைப்புக்காகப் பசித்திருந்தவன் ஆண்டவனும் நாயகமும் சொல்லிய விருந்துக்குப் பசித்திருக்க முடியாதென்றாலவனை அறிவுள்ள மனிதனில் சேர்த்து கொள்ள முடியுமா? மேலும் நோய் வாய்ப்பட்டு கஷ்ட திசையிலிருந்து கொண்டு நோன்பு வைக்க இயலாதவனாக விருப்பவனை நோன்பு வைக்கச் சொல்லி அவனுக்குக் கஷ்டத்தைக் கொடுக்காமல் அதற்குப் பகரமாய் நீயும் அந்த வலிமாவில் சேர்ந்து கொள்ள வேண்டுமென்ற நல்ல எண்ணத்துடன் அந்த ரமலான் மாதம் முழுவதும் பசியுள்ள ஓர் முசாபருக்கு சாப்பாடளித்து விடும்படி நமது பரிசுத்த மார்க்கத்தில்

இலேச செய்யப் பட்டிருப்பதை உணர்ந்தாவது அதன்படி நடந்து அந்த வலிமாவில் சேர்ந்து கொள்வீர்களாக.

மக்கா ஷரீபென்றும் மதீனா ஷரீபென்றும் பைத்துல் முகத்தஸ் ஷரீபென்றும் இந்த மூன்று ஊர்களையும் சிறப்புத் தங்கியதென்றும் சொல்லி யிருப்பதுடன் பைத்துல் முகத்தஸில் 1 ரூபாயை தருமம் கொடுத்தால் மற்ற விடத்திலிருந்து 100 ரூபாய் தருமம் செய்ததற்குள்ள பிரதிப்பிரயோஜனம் கிடைக்குமென்றும், மதீனாவிலிருந்து தருமம் செய்தால் ஒன்றுக்கு ஆயிரம் ஸவாபு கிடைக்குமென்றும், மக்காவிலிருந்து தருமம் செய்தால் ஒன்றுக்கு ஒருலக்ஷம் ஸவாபு கிடைக்கு மென்றும் சொலலப் பட்டிருக்கிறதே இம் மூன்று ஊர்களுக்கும் போக இயலாதவர்களுக்கு இப் பெரும் பாக்கியம் கிடைக்காமலாய் விடுகிறதேயென எண்ணி இப்பாக்கியம் உலகத்தார் அனைவருக்கும் கிடைக்க வேண்டுமென ஆண்டவனிடம் கேட்டு மக்கா மதீனா பைத்துல் முகத்தஸில் தருமம் செய்த பலனை அடைய நாடுபவர்களுக்காக இந்த ரமலான் மாதத்தில் செய்யப்படும் தருமத்தின் ஸவாபையும் மேற்சொன்ன மூன்று ஊர்களில் செய்யப்படும் ஸவாபையும் ஒரு மர்த்தபாவாக நமது நாயகம் (ஸல்) அவர்கள் ஆக்கி வைத்திருப்பதால் எக் காரணத்தைக் கொண்டும் இச் சிறப்புத் தங்கிய மாதத்தை வீணாக்கி விடாமல் நோன்பைக் கொண்டும். சதகாவைக் கொண்டும் சிறப்பித்து அதனால் கிடைக்கக்கூடிய பாக்கியங்களைப் பெற்றுக் கொள்வோமாக ஆமீன்.

## மற்றொரு சமயத்தில் ஹளரத்தவர்களால் செய்யப்பட்ட உபதேசம்

ஆயத்து "இன்னல்லாஹ வமலாயிகதஹுூ யுஸல்லூன அலன் நபிய்யி யா அய்யு ஹல்லதீன ஆமானூ ஸல்லூ அலைஹி வஸல்லிமூ தஸ்லீமா." (ஸல்லல்லாஹுூ அலா முஹம்மத் ஸல்லல்லாஹுூ அலைஹிவஸல்லம் 5 விடுத்தம்)

இந்த ஆயத்தில் வலுப்பந்தங்கிய அல்லா(ஹ்) ஜல்ல

ஷானஹுவத ஆலாவும் அவன் மலக்குகளும் அருமை நாயகம் (ஸல்) அவர்களின் மீது ஸலவாத்து ஓதுவதாகச் சொல்லி நம்மையும் ஓதுமாறு உத்தரவிடுகிறான். ஆனால் ஆண்டவன் நம்மைப் பார்த்து நீங்கள் நாயகத்தின் மீது ஸலவாத்து ஓதங்களென அம்றைச் சாட்ட வலுப்பந்தங்கியனாக விருந்தும், அவ்வாறில்லாமல் நானும் என் மலக்குகளும் ஓதுகிறோம் நீங்களும் ஓதுங்களென்று சொல்ல வேண்டியதே என்பதை நோட்டமிட்டால் அவற்றில் ஓர் இரகசியம் வெளியாகிறது. உதாரணமாக நீங்கள் வீடுகளில் பார்த்திருக்கலாம். தாயானவள் தனது சிறு குழந்தைக்கு உணவை ஊட்டுகிறாள் அக் குழந்தை உணவு இன்னவஸ்து அவை இன்ன பிரயோஜனத்தைக் கொடுக்க கூடியதென்பதை உணரப் போதிய அறிவில்லாததால் அல்லத் தட்டுகையில் அக் குழந்தையின் பார்வையில் தான் உண்பதாகவும் பக்கத்திலிருக்கும் மற்றக் குழந்தைகளும் உண்பதாகவும் சைக்கினை செய்து தன் வாயையும் அசைவு படுத்திக் காட்டி அக் குழந்தைக்கும் ஊட்டுகிறாள் உடனே அக்குழந்தையும் அதனை ஏந்து கொள்கிறது. அதேவிதமாக ஆண்டவன் நம்மீது கொண்டுள்ள அன்பால் அறியாத்தனத்தால் மூடப்பட்டிருக்கும் நாம் அருமை நாயகமவர்களின் மீது ஸலவாத்து ஓதி எண்ணத்துலையா மகிமைகளை அடைந்து கொள்ளும்படி இவ்வாயத்தில் தானும் தன் மலக்குகளும் ஓதுவதாகச் சொல்கிறான். இதனாலேயே நமது காமில் மஞ்சவி (படே சாஹிப்) ஹளரத்தவர் கள் தங்களின் பயானில் ஆண்டவனைப் புகழும்போது "மாதாவினுங் கருணையுள்ள ஏக வல்லோனே அல்லா(ஹ்)" என்றும், இன்னும் பலவிதமாகவும் புகழ்ந்து பாடுகிறார்கள். அதனைத் தாங்கள் பாட்டென்பதாக எண்ணிக் கொண்டீர்கள் அவர்களின் மகிமையையும் அவர்கள் கூறும் வார்த்தைகளின் இரகசியங்களையும் ஆரிபல்லாத மற்ற யாரால் அறிய வியலும்? இவ்விடத்தில் உங்களுக்கு ஓர் எச்சரிக்கை செய்து விடுகிறேன் அதாவது எல்லா நபிமார்களைக் கொண்டும் ஈமான் கொள்வது கடமையாயிருக்க ஒருவன் நான் எல்லா நபிமார்களைக் கொண்டும் ஈமான் கொண்டுள்ளே னென்பதாகக் கூறிவிட்டு உதாரணமாக அவர்களில் ஒருவரான மூஸா (அலை) அவர்களை நபியென்று

ஒப்புக் கொள்ள மாட்டேனென்று சொன்னால் அவன் நபிமார் களைக் கொண்டு ஒப்புக் கொண்ட ஈமான் நீங்கிவிடுவது போல எல்லா வலிமார்களையும் ஒப்புக் கொண்டு அவர்களிடம் வஸீலாத் தேடியும் அவர்களுக்காக மவுலூது ஓதி விருந்தளித்து மிருப்பவன் தன் சிற்றறிவுக் கெட்டாத காரணத்தால் ஓர் வலியை வலியல்ல வென்று வாதாடுவானாகில் அவன் மற்ற வலிகளிடம் வஸீலாத் தேடுவதும் அவர்களுக்காகச் செய்யும் செலவுகளும் வீணானதாக ஆகிவிடுவதால் இவைகளில் ஜாக்கிரதையாக நடந்து கொள்ளுங்கள். ஆனால் வலிமார்களைத் துயர வேண்டுமோ வென நினைக்கலாம். அல்லாஹுத்த ஆலா குர்ஆன் ஷரீபில் தன்னையும் தன் ரசூலையும் அவர்களின் உண்மையான அனந்தரக்காரர்களாகிய வலிமார்களையும் துயர்ந்து கொள்ளும் படி நமக்கு உத்தரவிட்டிருக்கிறான். ஆரிபீன்களால் குர்ஆனுக்குச் செய்யப்பட்டிருக்கும் தப்சீர்களைப் பார்த்தாலல்லவோ இவைகள் உங்களுக்குப் புலப்படும். நாயகம் (ஸல்) அவர்களின் மீது ஆண்டவன் ஓதும் ஸலவாத்து என்னவென்றால் அவர்களின் மீதும் அவர்களின் உம்மத்துகள் மீதும் செய்யும் ரஹ்மத்தாக விருக்கும் எது போலெனில் நாயகம் (ஸல்) அவர்கள் மிஃறாஜுக்குச் சென்றிருக்கும்போது லாமகானில் நின்று கொண்டு என் ரப்பு எங்கேயென வினவிய போது ரப்பு தொழுகிறானென பதில் கிடைத்ததால் ஆண்டவன் தொழுகுவது யாருக்கென்ற கேள்வி உண்டாகிவிட்டது. அதற்கு ஜவாபானது ஆண்டவன் தொழுகுவதென்பது அடியார்கள் மீது செய்யும் கிருபையாக விருக்குமென ஆரிபீன்கள் தீர்மானஞ் செய்திருக்கிறார்கள். மலக்குகள் ஸலவாத்து ஓதுகிறார்களென்பது நாயகத்தின் உம்மத்துகளின் மீது கிருபை செய்யும்படி ஆண்டவனிடம் கேட்கும் துஆ வாக விருக்கும். ஆனால் நாம் ஸலவாத்து ஓதுவது அல்லாஹுத்த ஆலாவால் கொடுக்கப்படும் ரஹ்மத்தைப் பெற்றுக் கொள்வதற்குள்ள சக்தி என்னும் பாத்திரத்தைக் கொடுக்கும்படி நாயகத்தின் மூலமாய் ஆண்டவனிடம் கேட்பதாக விருக்கும். அல்லாஹுத்த ஆலாவின் ரஹ்மத்தைத் தாங்கிக் கொள்வதற்கு அவனால் கொடுக்கப்படும் சக்தியால் தான் முடியுமல்லாது மனித

சக்தியால் முடியாதென்பதை ஞாபகத்தில் வைத்துக் கொண்டு நாலாவது கலிமாவாகிய தௌஹீதுக்கலீமாவை அடிக்கடி ஓதி வருவீர்களாக. இதனை இவ்வளவோடு நிறுத்துக் கொண்டு நமது கருத்தளவில் மீண்டு விடுவோம்.

ஆயத் : "குல்லி இபாதி யல்லதீன ஆமானூயுக்கீமுஸ்ஸலாத வயுன்பிகூன மிம்மா ரஜக்னாஹும் ஸிற்றன் வஅலானியதன் மின்கப்லி அன்ய ..தியயௌமுன் லாபை உண்பீஹி வலாகில்லால்"

(சுப்ஹானல்லாஹிவல்ஹம் துலில்லாஹி வலா இலாஹ இல்லல்லாஹு வல்லாஹு அக்பர்)

அல்லாஹு ஜல்லஷான ஹுவத ஆலா தன்னுடைய குர்ஆன் ஷரீபின் சூரத் இப்றாஹீமில் நமது அருமை நாயகம் (ஸல்) அவர்களை நோக்கி "நாயகமே! என்னுடைய அடியார்களில் உங்களுடைய சொந்தக்காரர்களுக்குச் சொல்லுங்கள் என்பதாகச் சொல்லி பின்னால் சில விஷயங்களையும் சொல்லியிருக்கிறான். ஆனால் அல்லாஹுத்த ஆலா நாயகத்தின் பாட்டனாராகிய இப்றாஹீம் அலைஹிவஸ்ஸலா மவர்களின் நாமத்தை இந்த சூராவுக்குக் கொடுத்து குறிப்பாக உங்களின் சொந்தக்காரர்களுக்குச் சொல்லுங்களென்று சொல்லியிருக்க அதை நாம் பொதுவான மஜ்லிசில் பேசுவது ஒழுக்கல்ல. ஆகையால் நாமும் அந்த அதபை பேண வேண்டியதிருக்கிறது. இந்த இரண்டு நாட்களாக பொது வான ஆயத்துகளைக் கொண்டு பயான் செய்து விட்டோம் ஆகையால் இம் மஜ்லிசில் கூடியிருப்பவர்களில் யார் நாயகத்திற்குச் சொந்தக்காரர்களாக வில்லையோ அவர்கள் வீணாக விழித்திருக்காமல் தயவு செய்து இம் மஜ்லிசை விட்டுத் தங்களின் வீடுகளுக்குச் சென்றுவிடவும். எழுந்து போகும்படியாகச் சொல்லி ஐந்து நிமிஷமாகியும் இதுவரை யாரும் புறப்படாமலிருப்பதைப் பார்த்தால் எல்லோரும் தங்களை சொந்தக் காரர்களென எண்ணிக் கொண்டிருப்பதாகத் தெரியவருகிறது. ஆனால் சொந்தக்காரர் யாவர், அல்லாதார் யாவரென்பதைப் பற்றி முதலில் கொஞ்சம் சொல்லுகிறேன். அதனைக் கேட்ட பின்பாவது சொந்தக் காரரல்லாதவர்கள் எழுந்து தங்களின் வீடுகளுக்குச் சென்று

விடவும் (சுப்ஹானல்லாஹிவல்)

அல்லாஹ் ஜல்லஷானஹூவத ஆலாவையும் அருமை நாயகம் (ஸல்) அவர்களையும் கொலை செய்து விட வேண்டுமென இடுப்புக் கட்டிக் கொண்டு ஆயுதம் தாங்கியவர்களாகத் தேடித் திரிபவர்களை நாயகத்துக்குச் சொந்தக்காரர்களென்பதாகச் சொல்ல முடியுமா? என்ன அநியாயம். இப் பாவிகள் தங்களுடைய தாய் தகப்பன், பிள்ளை, பெண் சாதிகளை வெட்டாமல் அருமையாக நாம் ஒப்புக் கொண்டிருக்கும் ஒருவனாகிய ஆண்டவனையும் அவனுடைய ஹபீபாகிய முஹம்மது (ஸல்) அவர்களையும் கொலை செய்யத் துணிந்தார்களே இவர்களைப் பற்றி என்ன சொல்வது? நாயகத்துக்குச் சொந்தக்காரர்களாக ஆகவேண்டு மென்ற அவாவினால் எத்தனையோ நாதாக்கள் காடுகளிலும் மலைகளிலுமாக அலைந்து திரிந்து கொண்டிருக்க இப் பாதகன் கொலை செய்வதற்காகத் தேடுகின்றானே இவனும் சொந்தக் காரனாக ஆகுவானோ, இதுவுமல்லாமல் இக் கொலை பாதகர்களுக்கு பக்க பலமாக ஆயுதங்களை கூர் செய்து கொடுத்துக் கொண்டு உபகாரம் செய்பவர்களாக இருக்கின்றார்களே இவர்களைச் சொந்தக்காரர்களென்றும் சொல்லலாமா? இவர்கள் யாரென்பதைக் கூறுகின்றேன் கவனிப்பீர்களாக. முஸ்லீம் களிடத்தில் உபகாரத்துக்காகப் பொருள் கொடுத்து அதனைத் திரும்ப வாங்குங் காலத்தில் வட்டியுடன் வாங்குகின்றானே. அவன் யாரென்றால் அவன்தான் ஆண்டவனையும் அவனுடைய ஹபீபையும் வெட்டுவதற்காகத் தேடுபவனென்றும் அதற்குச் சீட்டுகள் எழுதிக்கொடுத்து சாக்ஷிபோடுபவனே ஆயுதந் தீட்டிக் கொடுப்பவனென்றும் ஆரிபீன்கள் தீர்மானம் செய்திருப்பதால் இப்பேர்ப்பட்ட கொடிய காரியத்தைச் செய்துக் கொண்டிருப் பவர்களை நாயகத்திற்கு சொந்தக் காரர்களெனச் சொல்லமுடியுமா. அவர்கள் இவ்விடத்தில் இருக்கலாமா?

அல்லாஹ் ஜல்லஷான ஹூவத ஆலா குர்ஆன் ஷரீபில் நீங்கள் ஜினாவிற்கு முடுகவேண்டாமென்று கூறியிருக்க அதற்கு

விரோதமாக ஹைறவானிய்யத்தின் தன்மையில் குடியிருந்து கொண்டு கண்கண்ட ஸ்திரீகளிடத்திலெல்லாம் நாற்கால் பிராணிகளைப்போல் சகவாசம் செய்துகொண்டிருப்பவனை என்னென்று சொல்வது? இக் காரியத்திற்காக இவர்களுக்களிக் கப்படும் கூலியைக் கவனியுங்கள். ஜினாச் செய்த ஆணோ பெண்ணோ யாராயிருப்பினும் அவர்களின் ஆயுள் முடிவடைந்து மவுத்தைப் பெற்று அவர்களை குழியறைக்குள் மறைத்தவுடன் அவர்களிடம் கேட்கவேண்டிய கேள்விகளை முடித்துக்கொண்டு ஆணாயிருப்பின் பெண்ணைப் போலும், பெண்ணாயிருப்பின் ஆணைப்போலும், நரகலோகத்தின் கொடிய நெருப்பினால் உருவம் செய்து இவர்களோடு படுக்கவைத்து இவர்கள் உலகத்தில் பாராட்டிய இன்பத்தைப் போல் இன்பம் பாராட்டச் சொல்லி வேதனைப் படுத்துவார்கள். அவ் வேதனைக்கஞ்சி அந்நெருப்பு உருவத்தை நெருங்கியவுடன் அனலில்பட்ட மெழுகு போல் உருகிவிடுவார்கள். மறு விடுத்தமும் மலக்குகள் உருவமாக்கு வார்கள். இவ்வாறே கியாம பரியந்தம் அதாபில் அகப்பட்டுக் கொண்டிருப்பார்கள். இவ்வாறு அதாபை பெற்றுக் கொள்ளக் கூடிய ஜினாவைச் செய்து வருபவர்களை நாயகத்தின் சொந்தக்காரர்களென்று சொல்லலாமா? இவர்கள் இக்கூட்டத்தில் இருக்கலாமா?

தன்னைப் பெற்றதாயின் பாதத்தடியில் பிள்ளைகளுக்கு சுவர்க்கம் உண்டாகியிருக்கின்றதென நாயகம் (ஸல்) அவர்கள் திருவாய் மலர்ந்தருளியிருக்க அதற்கு மாற்றமாக அத்தாயை வாயில் வந்தவாறெல்லாம், பேசுவதும் காலினாலும் கையினாலும் உதை கொடுப்பது மாகயிருக்கும் பாதகர்களைப் பற்றி ஒன்று சொல்வோம். ஏ! பாதகர்களே, உங்களுடைய தாயானவள் உங்களுக்கு ஒரு பெண்பிள்ளையாகத் தோன்றுகிறதல்லவா? அவை உண்மையான பார்வையல்ல. ஆனால் அவள் பெண் பிள்ளையல்லவாவென்று நீ கேட்கலாம் உன் பக்கத்து வீட்டார்களுக்கு அவள் ஒரு பெண் பிள்ளையே அல்லாது உனக்கு அவ்வாறல்ல ஏனெனில் கஃபதுல்லாவிலிருந்து ஆண்டவனுடைய ரஹ்மத்தானது இவ்வுலகிற்கு வெளியாகிறதென்று சொல்லியிருப்

பதற்கொப்ப உன் தாயின் பாதத்திலிருந்து உனக்கு ரஹ்மத்தென்ற பாக்கியம் கிடைக்கு மென்பதாகச் சொல்லப்பட்டிருப்பதை சிந்தனை செய்துபார். உலகிற்கு கஃபாவும் உனக்குத் தாயுமல்லவோ ரஹ்மத்தைக் கொடுக்கும் தலமாக ஆகியிருக்கிறது. இவ்வாறு ரஹ்மத்தடைய வேண்டிய கஃபாவைப் போன்ற சங்கை பொருந்திய உன் தாயை காலால் உதைத்து விட்டு வேறு எங்கிருந்து ரஹ்மத் அடையப் போகின்றாய்? ரஹ்மத்தென்ற தாயை கஷ்டத்துக்குள்ளாக்கி வைத்த உனக்கு உலக ரஹ்மத்தாகிய நாயகத்தின் உறவு கிடைப்பது முடியுமாவென்பதை கவனிக்க வேண்டாமா? இச் செயலுடையவர்கள் எதுவரை தன் கொடிய செயலில் நின்றும் விடுதலையடைவில்லையோ அதுவரை நாயகத்தின் சொந்தக் காரர்களாகுவதற்கு முடியாமலிருப்பதால் இம் மஜ்லிசிலிருப்பதற்கு லாயக்காக மாட்டார்கள்.

இக் கூட்டத்தார்களை விடுத்து நாயகத்தின் சொந்தக் காரர்கள் யாவரென்பதைப் பற்றிக் கவனிப்போம். ஒன்றாவது உலகமாகிய இம் மண்ணுலகத்திற்கு அதிபதியாக பாவா ஆதம் (அலை) அவர்களையும் நடு உலகமாகிய (பர்ஜகுக்கு) செய்யிதினா ஈசா (அலை) அவர்களையும் கியாமநாளைக்கு அதிபதியாக நமது நாயகம் காத்தமுல் முர்ஸலீன் முஹம்மது முஸ்தபா ரசூல் (ஸல்) அவர்களையும் ஏற்படுத்தி இருப்பதாகச் சொல்லப் பட்டிருப்பதால் நாயகம் (ஸல்) அவர்களைச் சேர்ந்தவர்கள் கட்டாயமாக கியாம நாளை எதிர்பார்த்தே தங்களின் எக் காரியங்களையும் செய்பவர்களாக விருப்பார்கள். கியாம நாளை எதிர் பார்ப்ப தென்பது தாங்கள் செய்த காரியங்களால் கியாம நாளையில் அவமானப் பட நேரிடுமா அல்லது சிறப்புப் பெற முடியுமா வென்பதிலேயே கண்ணுங் கருத்துமாக இருப்பதுடன் பாபமான காரியங்களில் தங்களின் நாட்டத்தைக் கூடச் செலுத்த மாட்டார்கள். இவ்வித நாதாக்களாகிய நாயகத்தின் சொந்தக்காரர்களுக்கே ஆண்டவன் சொல்லியிருப்பதால் அவர்களைச் சேர்ந்தவர்கள் தான் இம் மஜ்லிசிலிருப்பவர்களென்ற நல்ல எண்ணத்துடன் நாம் ஆண்டவன் சொல்லியிருப்பதைச் சொல்லிவிடுவோம். (சுப்ஹானல்லாஹ்__)

ஆண்டவன் "நாயகமே என் அடியார்களில் உங்களின் சொந்தக்காரர்களை தீர்மானஞ் செய்யக்கூடிய நாள் வருவதற்கு முன் தொழுது கொள்ளும்படியும் நாம் கொடுத்ததில் நின்றும் செலவு செய்பவும் சொல்லுங்கள்" என்பதாகக் கூறியுள்ளான். இவ்வாயத்தானது நாயகத்துக்குச் சொந்தக்காரர்கள் இன்னார்தான் என்பதை பகிரங்கமாகச் சொல்லி விட்டதால் தொழுதவர்களும், ஜகாத்து, ஸதகா கொடுத்தவர்களும் தான் நாயகத்துடைய சொந்தக்காரர்களென்பதாகத் தெரியவருகிறது. தொழுகையானது ஆண்டவனுக்கும் அடியானுக்கும் உள்ள வித்தியாசத்தைக் காட்டக் கூடியதாக இருக்கிறது. ஏனெனில் அல்லாஹ்வின் தன்மையானது வணங்காததாகவும் அடிமையின் தன்மையானது வ்ணங்க வேண்டியதாகவு மிருக்கும். இதனாலேயே எவன் திளக் கடனாகிய ஐங்காலத் தொழுகையை நிறைவேற்றி வைக்கவில்லையோ அவன் அந்தரங்கத்தில் தன்னை றப்பென்று தாவாச்செய்வது போலாகுவதால் இவர்களெல்லாம் தன்னை றப்பென்று தாவாச் செய்த பிரஊனின் கூட்டத்தைச் சேர்ந்தவர்களாகும்.

இக்காலத்தில் சிலர் ஆண்டவனை வணக்கம் புரிவதில் சோம்பல் செய்துகொண்டு தாங்கள் ஷெய்கிடத்தில் முரீதாகி விட்டதால் தங்களின் காரியங்களெல்லாம் பூர்த்தியாகி விடுமென்று மனப் பால் குடித்துக் கொண்டிருக்கிறார்கள். இவைகளெல்லாம் வழிதவறிப்போன அடையாளமாகும். ஏனெனில், முரீது கொடுப்பதற்கு லாயக்கான ஷெய்கைக் கண்டு முரீது வாங்குவதே பிரயோஜனத்தைக் கொடுக்குமென்றும், அவ்வாறில்லாத ஷெய்குமாரிடத்தில் முரீது வாங்கிக் கொண்டதாக எண்ணி அவர்களால் கொடுக்கப்படும் பசுவின் பாலை சாப்பிடுவது சிறுநீரை சாப்பிடுவது போலாகுமென்றும் நாதாக்கள் சொல்லியிருக்கிறார்கள். மேலும் ஷெய்கானவர் அந்தரங்க உஜூதாகிய ரூஹின் வைத்தியரென்றும், முரீதின் மனதிலிருக்கப் பட்ட கெட்ட காரியங்களை தங்களின் மனக்கண்ணால் விளங்கி அதனைவிட்டு அவனைப் பரிசுத்தம் செய்யக் கூடியவரே ஷெய்கென்றும், அவ்வாறில்லாமல் பொருளிச்சையினால் ஷெய்கு வேடம் பூண்டு சில அஸ்மாக்களைச் சொல்லிக் கொடுப்பவர்கள்

ஷைத்தான்களாகுமென்றும் அவர்களை விட்டும் விரண்டோடுவது அவசியமென்றும் நாதாக்களாகிய மகான்கள் தீர்மானஞ் செய்திருக்கிறார்கள்.

உண்மையான ஷெய்கில் ஒருவர் செய்ததைக் கவனியுங்கள் - அம்மகானாகிய ஷெய்கிடத்தில் முரீதாக வேண்டு மென்று வருபவர்களை நோக்கி நீ முரீதில் சேரவேண்டுமானால் 1-வது பள்ளிவாயிலை உடைத்துவிட வேண்டும். 2-வது தஸ்பீஹ் மணியை அறுத்துவிட வேண்டும். 3-வது ஒலுவுக்காக தண்ணீர் வைக்கும் பாத்திரத்தை உடைத்து விடவேண்டும், 4-வது தொழுகக்கூடிய முஸல்லாவைக் கிழித்துவிட வேண்டும் 5-வது குர் ஆனை எரித்துவிட வேண்டும், 6-வது பிள்ளையைக் கொலை செய்து விட வேண்டும், 7-வது தொழுகையை விட்டு விட வேண்டும், 8-வது பெண்ஜாதியை தலாக்கு விட்டு விட வேண்டும், 9-வது சாராயம் குடிக்க வேண்டும், 10-வது ஜின்ஜீரை சாப்பிட வேண்டும், 11-வது நாயைத் தின்ன வேண்டும் என்று சொல்லிக் கொண்டிருப்பார்கள், போனவர்கள் மனவேதனையடைந்தவர் களாக மேல் சொன்ன காரியங்களையெல்லாம் காபிறானவர் கூடச் செய்யச் சொல்ல மாட்டாரே. ஆகையால் இவர் ஷெய்கல்ல ஷைத் தானாக இருக்குமென்று கூறி விட்டு விரண்டோடி விடுவார்கள். இம்மாதிரியே அவர்களின் காலம் நடந்தது. கடைசியாக என்போன்ற அறியாதரொருவர் சென்று அவர்களிடம் நெருங்கி ஹளரத்! தாங்கள் சொல்வதைச் செய்து வருகிறேன். ஆனால் அவைகளெல்லாம் எனக்கு விளக்கமாகவில்லை. எனக்கு விளங்கும்படி அறிவித்துக் கொடுங்களென்று மன்றாட்டம் புரியலானார்.

ஷெய்கவர்களின் மனமிரங்கி ஒன்றாவதாகப் பள்ளியை உடைத்துவிட வேண்டுமென்றது தனக்கிருந்துவரும் செல்வத்தைக் கொண்டு போதுமென்ற நிம்மதி யடையாமல் பெரிய வீடு கட்ட வேண்டுமென்றும், தான் ஓர் பெரிய தன வந்தனாகிவிட வேண்டுமென்றும் எண்ணிய எண்ணமானது இவன் மனதில் ஓர் கட்டிடமாகத் தோன்றுகின்றதால் அக்கட்டிடமாகிய பள்ளிவாயிலை

உடைத்து விடச் சொன்னதேயல்லாது தொழுகக் கூடிய பள்ளிவாயிலையல்ல. இரண்டாவதாக தஸ்பீஹ் மணியை அறுத்துவிடச் சொன்னது உன்னில் தஸ்பீஹ மணியைப் போல் ஒன்றன் பின் ஒன்றாக வந்து கொண்டிருக்கும் பலவித எண்ணங்களை விட்டு விடச் சொன்னதேயல்லாது கையில் வைத்திருக்கும் தஸ்பீஹ மணியையல்ல, மூன்றாவது தண்ணீர் பாத்திரத்தை உடைத்துவிடச் சொன்னதானது ஆண்டவன் ரஹ்மத் திருக்க வேண்டிய உன்னுடைய கல்பில் பலவித கெட்ட எண்ணங்கள் நிரப்பி வைத்திருப்பதை விட்டு விடுவதேயல்லாது தண்ணீர் வைத்திருக்கும் பாத்திரத்தை உடைப்பதல்ல. நான்காவதாக முஸல்லாவைக் கிழித்து விடச் சொன்னதானது உன்னை மற்றவர்களைக் காண மேல்பட்டவன் என்ற அகப் பெருமையைக் கொண்டு மூடிக் கொண்டிருக்கும் துப்பட்டாவைக் கிழித்துவிடச் சொன்னதல்லாது தொழுகுவதற்குள்ள முஸல்லாவையல்ல, ஐந்தாவதாக குர்ஆனை எரித்தவிடச் சொன்னதானது ஆண்டவன் இன்சானை அழகாகப் படைத் திருப்பதாகவும் மற்றவைகளை விட சிறப்புப் பெற்றவனென்றும் சொல்லியிருக்க நீ அவன் கெட்டவன் அவள் கெட்டவள் என்பதாக உன் மனதில் எழுதி வைத்திருக்கும் குர் ஆனையல்லாது சிறப்புத் தங்கிய குர்ஆன் ஷரீபையல்ல, ஆறாவதாக பிள்ளையைக் கொலை செய்துவிடச் சொன்னதானது உன்னால் செய்யப்படும் பாபமான காரியங்களெல்லாம் உன் பராமரிப்பில் வளர்ந்தேறிவரும் பிள்ளையைப் போல் வளர்ந்தேறி வருவதால் அப்பிள்ளையேயல்லாது இன்சானையல்ல, ஏழாவதாக தொழுகையை விட்டு விடச் சொன்னதானது பணக்காரர்களுக் கென்றும் வாயாடிகளுக்கென்றும், முகதாக்ஷண்யமாகச் செய்யும் காரியங்களான தொழுகையை விட்டுவிடுவதல்லாது ஐங்காலத் தொழுகையையல்ல. எட்டாவதாக பெண்ஜாதியை தலாக்கு விட்டு விடச் சொன்னதானது துனியாவானது மிரட்டுதலை உண்டாக்கும் ஓர் பெண் உருவமாக விருப்பதால் அதன் மீதுள்ள முஹப்பத்தை விடுவதேயல்லாது நிகாஹ் செய்திருக்கும் மனைவியையல்ல, ஒன்பதாவதாக சாராயம் குடிக்கச் சொன்னதானது ஆண்டவனின்

கமால் ஜமாலைப் பார்த்தும் அருமை நாயகம் (ஸல்) அவர்களின் வர்ணிப்புகளைப் பார்த்து அவர்களின் மீதும் ஆண்டவனின் மீதும் காதல் பூண்டு இஷ்கென்ற சாராயத்தைக் குடித்து அந்நிலையி லேயே சொக்கியிருப்பதேயல்லாது மஸ்துக் கொண்டு பங்கப் படக்கூடிய இந்தச் சாராயத்தையல்ல. பத்தாவதாக ஜின்ஜீரை தின்ன வேண்டுமென்றதானது உன்னில் காணப்பட்ட கெட்ட குணங் களுக்குத் தலைமையாகிய குபாடமென்ற குணத்தை விட்டு விடுகிறதல்லாது நஜீசைச் சாப்பிடக்கூடிய ஜின்ஜிரையல்ல, பதினொன்றாவதாக நாயைத் தின்ன வேண்டுமென்றது, மனிதர் களின் மீது சீறிப் பாய்ந்து விழக்கூடிய நாயின் குணம் காணப்படுவதை எடுத்து விடுவதேயல்லாது உன் பார்வையில் தோன்றித் திரியும் படியான நாயையல்லவென்ற பதிலைச் சொன்னார்களாம். இவ்வாறாக மன வியாதியை அகற்றக்கூடிய ஷெய்க்குகளே முரீது கொடுப்பவர்களுக்கு லாயக்குடையவர் களாதலால் மற்றவர்களை ஷெய்காக்கிக் கொள்வதும் அவர்களிடம் முரீது வாங்குவதும் விலக்கப்பட்ட காரியமாகும்.

மேலே சொல்லி வந்த ஷெய்கவர்கள் தொழுகையை விட்டு விடும்படியாகச் சொல்லியிருக்கிறார்களா? இம்மாதிரியாக மகான்களெல்லாம் சொல்லியிருக்க சில மடையர்கள் தொழுகையை இலேசு காண்பது அவர்களின் தெரியாத்தனமே யல்லாது வேறில்லை. இரும்பின் துருவை கொல்லன் உலை நீக்கி விடுவது போல் மனதிலிருக்கும் இருளைத் தொழுகை நீக்கி விடக்கூடிய சக்தியையுடையதாக விருப்பதால் அதைக் கொண்டே பாக்கிய மடைய வேண்டியதிருக்கிறது. ஒரு நாளையத் தினம் ஆயிஷா (ரலி) அவர்கள் நாயகம் (ஸல்) அவர்களைப் பார்த்து எங்களின் நாயகமே! மஹ்ஷரின் முத்தவெளியில் கூடியுள்ள மனிதர்களின் மாபெருங் கூட்டத்திடையில் தங்களின் உம்மத்து களை எவ்வாறு கண்டு பிடிப்பீர்களென வினவியபோது கருப்பு நிறமுடைய குதிரைக் கூட்டங்களில் வெண்மை கலப்புள்ள பஞ்ச வர்ணக் குதிரையைக் கண்டு கொள்வது எவ்வளவு சவுகரியமோ அதேபோல் அம்மனுக் கூட்டத்தினிடையே என் உம்மத்துக்கள்

தங்களின் தொழுகையைக் கொண்டு அடைந்த ஜோதியை சுஜூதின் ஏழு தலங்களிலும் உடையவர்களாகக் காணப்படுவார்கள் என்று நமது நாயகம் (ஸல்) அவர்கள் பதிலுரைத்தார்களாம்.

நாம் நாயகம் (ஸல்) அவர்களின் உறவினர்க ளாகுவதற்கு அவர்களின் மீது ஸலவாத்து ஓதுவதும் முக்கியமானதாக விருக்கும். ஆனால் இந்த ஸலவாத்தின் மகிமையைப் பற்றி இதற்கு முன் பல தடவைகளிலும் சொல்லியிருப்பதால் அதைப் பற்றி விவரிக்காமல் சுருக்கமாக அதன் பிரயோஜனத்தைச் சொல்லி பயானை முடித்து விடுவோம். நாளை வரும் கியாமநாளையில் அடியார்களைக் கேள்வி கணக்குகள் கேட்கப்பட்டு அவரவர் களுக்குள்ள கூலிகளைக் கொடுக்கப்பட்ட பின் சுவர்க்க வாதிகள் தாங்களிருந்து வரும் சுவர்க்க லோகத்தைச் சுற்றிப் பார்த்துக் கொண்டு வரும் போது அவ்விடத்தில் ஒளியினால் செய்யப்பட்டிருக்கும் முத்துமாலைகளையும், லிபாசுகளையும், தலைப் பாகைகளையும், பூச்செண்டுகளையும் பார்த்துவிட்டு இவைகள் யாருக்குடையதென்று கேட்பார்களென்றும், அதற்கு மலக்குகள் இவை தனியாக வியாபாரத்துக்காக வைக்கப் பட்டிருக்கிறதெனச் சொல்வார்களென்றும், அவ்வாறானால் இதன் கிரயம் என்னவென்பார்களென்றும் முத்துமாலையின் விலையானது 1000 ஸலவாத்ததென்றும், லிபாசின் விலையானது 700 ஸலவாத்தென்றும் பல விலையாகச் சொல்வார்களென்றும், அப்போது இவ்விடத்தி லிருக்குங் காலங்களில் ஸலவாத்தை ஓதிச் சேகரம் செய்திருந்தவர்கள் அதனைப் பெற்றுக் கொள்வார் களென்றும் அவ்வாறில்லாதவர்கள் கைசேதப்படுவார்களென்றும் ஆஷிகீன்கள் சொல்லியிருப்பது போல் ஸலவாத்தானது மிகுந்த காரியங்களுக்கு உதவி செய்யக் கூடியதாக விருப்பதால் நாமெல்லோரும் மேலே சொல்லப் பட்டது போல் தொழுகை யையும் சதகாவையும் ஸலவாத்தையும் விட்டு விடாமல் தாயிமாகச் செய்து வந்து அந்த நாயகம் (ஸல்) அவர்களின் சொந்தக்காரர்களில் சேர்ந்து கொள்ள ஆண்டவன் உதவி செய்வானாக. ஆமீன்.

## ஹளரத் அவர்களால் தங்களின் மாணக்கரொருவருக்கு எழுதிக் கொடுக்கப்பட்டிருந்த பிரதியின் நகல்

ஓ! நெஞ்சே! நீ இஸ்லாமாக வேண்டுமென்றால் இஸ்லாத்தின் ஐந்து பர்லுகளையும் அறிந்து அதன்படி நடந்து அதனால் கிடைக்கப் பெறும் ரஹ்மத்தென்ற கோட்டைக்குள் புகுந்துவிட வேண்டும். இஸ்லாமென்பது ஐந்து எழுத்தைக் கொண்ட வார்த்தையாக இருக்கிறது. அதன் கருத்து மனிதன் ஜீவித்திருப்பது ஐந்து வித உஜூதைக் கொண்டிருப்பதால் அதனைக் கூறுகிறேன். 1வது வாஜிபுல் உஜூது இதுவானது தோற்றத்தில் காணப்படும் உடலாக யிருக்கும். 2வது மும்கினுல் உஜூது இதன் கருத்து நப்ஸில் தோன்றும் எண்ணங்களாகும். 3வது மும் தனி உல் உஜூது இதன் கருத்து ரூஹே ஹைவானின் ஸிபத்துகளாகும் 4வது ஆரிபுல்உஜூது: இதன் கருத்து ரூஹே இன்ஸானாகவிருக்கும், 5வது வாஹிதுல் உஜூது; இதன் கருத்து அல் உஜூது முத்லக் என்று சொல்லப்பட்ட பகாவான கதீமான அஹதான ஸமதான ஹக் தஆலாவின் நூராக விருக்கும். இந்த ஐவகை உஜூதையும் அறிந்து அவைகளில் மூன்று உஜூதையுங் கடந்து தன் அசல் நிலைமையாகிய வாஹிதுல் உஜூதில் சென்றவன் தான் இஸ்லா மார்க்கத்திருப்பவனாகும். இதனாலேயே உன்னை ஐந்து கலிமாக்களையும் அறிந்து கொள்ளும்படி ஏவப்பட்டிருக்கிறது.

ஓ! ஸாலிகே! முந்திய கலிமாவின் கருத்தானது திலாவதுல் குத்ரத் திலாவதுல் ஹகீகத், திலாவதுல் உஜூத் திலாவதுல் குர் ஆன் என்ற நான்கு வித திலாவத்தைக் கொண்டும் அல்லா(ஹ்) ஜல்லஷானஹூவ தஆலாவை சதாவும் ஆவல் கொண்ட வனாகவும் அவனைக் காணாததால் ஏக்கம் கொண்டவனாகவுமாகி லைலாவை மஜ்னூன் தேடுவது போலிருப்பதுவே முந்தின கலிமாவின் தாத்பரியமாகும். இரண்டாவது கலிமாவாகிய ஷஹாதத் கலிமாவின் கருத்தானது;

நப்ஸானிய்யத்தென்ற துர்ச்செய்கை துற்குணம் முதலியவைகளை தன்னைவிட்டும் நீக்கிக் கொண்டும் ஆண்டவனின் அம்ருக்குத் தலை சாய்ப்பதும் அவனை வணங்குவதிலுமாக விருந்து அவனால் படைக்கப்பட்ட வஸ்துகளின் உள்ளமையை உணர்ந்து அவைகளை ஒர்உஜூதாக எண்ணியிருப்பதை விட்டுவிட்டு அவைகளில் ஹக்கை கைபாகவும் அய்னாகவும் கண்டு கண்டபடி நாவினால் சொல்வதே இரண்டாங்கலிமாவின் தாத்பரியமாகும். 3வது கலிமா தம்ஜீதென்பது மேல் சொல்லிய இரண்டாவது கலிமாவின்படி உலகில் ஆண்டவனைத் தவிர்த்து மற்றவைகளைக் காணாததால் அதன் மீது உள்ளன்பு எழுச்சியாகி தன் நினைவற்ற புகழாக நாவில் நின்று வெளியாகுவதாக விருக்கும். இதுவே மூன்றாங் கலிமாவின் தாத்பரியமாகும். 4வது கலிமா தவ்ஹீதென்பது மேற்சொன்னபடி ஆண்டவனின் உண்மைத் தத்துவத்தையறிந்து புகழ்ந்தவுடன் தன் நப்ஸின் ஏமாற்றமானது நீங்கி சகல தத்துவமும் ஆண்டவனு டையதே என்று எவ்வகையான உலக அல்லல்களை விட்டும் தன்னைக் காப்பாற்றிக் கொள்ளும்படியான தத்துவத்தி லாகிவிடுவதே நான்காம் கலிமாவின் தாத்பரியமாகும், 5வது கலிமா ரத்துல் குப்ரென்பது மேற்கூறியபடியான நடையுடையவனை உலகத்தாரால் மதிப்பிற் கடங்காமல் புகழப்படும் மண், பெண் பொன் என்ற மூன்று வஸ்துக்களாலும் ஏமாற்ற முடியாம லாய்விடுவதாலும் அல்லா (ஹ்) வல்லாத மற்றவைகளுக்காக எவ்வகையான வணக்கமும் செய்யாதவனாக ஆகிவிடுவதாலும் அவன் திட்டமாக குப்ரை விட்டும் நீங்கிவிட்டதால் அவன் ஐந்தாவது கலிமாவை மொழிந்தா னென்பதுவே இதன் தாத்பரியமாகும். இவ்விதமான நிலைமையில் கலிமாவை மொழிந்தவன் (இஸ்திகாமதுஷ்ஷரீஅதிஅலத்தரீகதி) என்ற தீனின் வெளிரங்கம் உள்ரெங்கம் இரண்டையும் சேர்த்து நடத்தத் திராணியுடையவனாகி அல்லாஹுத்த ஆலாவின் (அப்துஹூ) அடியான் என்ற பட்டத்துக்கு லாயக்கானான். இவ்விதமான தன்மையை அடைந்தவர்களாக விருந்ததாலேயே நாயகம் (ஸல்) அவர்களை அல்லா ஹூத்தா ஆலா கலிமாவிலும் குர் ஆனிலும் அப்துஹூ என்ற பட்டத்தைக் கொடுத்து

அழைத்திருக்கிறான். மேற்கூறிய படி நடந்து அப்தென்ற பட்டம் பெற்றுக் கொள்ளாவிட்டால் தன்னை ரப்பென்று தாவாச் செய்த பிரஊனுடைய கூட்டத்தில் சேர்ந்தவனென்று சொல்லப்படும்.

ஓ! ஸாலிகே! இஸ்லாத்தின் பர்லுகளில் ஒன்றாகிய கலிமாவை அறிந்து கொண்டபின் இரண்டாவதான தொழுகையைப் பற்றியும் சிறிதளவு கூறுகின்றேன். தொழுகையின் ஆரம்பத்தில் துப்புரவானது பர்லாக்கப் பட்டிருக்கிறது. ஆனால் துப்புரவென்பது இரண்டு வகையைக் கொண்டிருக்கிறது. முதலாவது ஜனாபத்தென்னும் பெரிய நஜீஸ். இரண்டாவது உறுப்புகளால் செய்யப்படும் பாபங்களால் ஏற்பட்ட சிறிய நஜீஸ். இவ்விரண்டை விட்டும் பரிசுத்தமாக இருக்க வேண்டியது அவசியமாக விருக்கிறது. ஜனாபத்தை நீக்குவதென்பது தன் உயிரின் மீதும் பொருளின் மீதுள்ள ஆசையை விட்டு விடுவதாக விருக்கும். சிறு துடக்கை நீக்குவதற்குள்ள (ஒளுவின்) பர்லுகள் நான்காகவிருக்கும். 1வது முகத்தைக் கழுகுவது இதன் கருத்து துனியாவின் ஆசையை நீக்கிவிடுவது. 2வது இரு கரங்களையும் கழுகுவது இதன் கருத்தாவது உலகத்திலுள்ள எவ்வஸ்துவுக்கும் தன் கரங்களால் யாதொரு தீங்கும் செய்யாதிருப்பது. 3வது சிரசில் மஸ்ஹு செய்வது இதன் கருத்து தலைமைத்தனம் வேண்டுமென்ற எண்ணம் அகப் பெருமை முதலியவைகளை விட்டு விடுகிறது. 4வது இரு பாதங்களையும் கழுகுவது இதன் கருத்தாவது தன்னின் பிரயாசையினால் தான் ஜீவித்திருப்பதான எண்ணத்தை விட்டு விடுகிறது. இவ்விதமாக பாதினின் ஒளுவையும் செய்தவனே ஒளுவின் பிரயோஜனத்தையடைவான்.

ஓ! ஸாலிகே! நீ பாதினின் ஒளுவைத் தெரிந்து கொண்ட பின் தொழுகையை அறிந்து கொள்ள வேண்டியவனாகின்றாய் தொழுகையானது நான்கு விதமாயிருக்கிறது. முதலாவது ஷரீஅத்தின் தொழுகை. அதாவது உடலைக் கொண்டு நிலை ருகூ: ஸுஜூத் இருப்பு என்ற நான்குவித நிலைமையாக விருக்கும் இதற்கு அஹ்மத் என்றும் இதனை நிறைவேற்றியவர்களை முஹம்மதென்றுஞ் சொல்லப்படும். 2வது தரீகத்தின் தொழுகை

இவை கல்பைச் சேர்ந்ததாகவிருக்கும். அதாவது நான் செய்யும் செய்கைகளையும் நான் நாடும் நாட்டங்களையும் ஆண்டவன் அறிந்து கொண் டிருக்கிறானென்பதை உணர்ந்தும் ஷரீ அத்தில் விலக்கப்பட்ட காரியங்களைத் தவிழ்ந்து கொள்கிறது. 3வது ஹகீகத்தின் தொழுகை. இவை ரூஹைச் சேர்ந்ததாக விருக்கும். அதாவது அல்லாஹுத்த ஆலாவின் புரத்திலிருந்து உண்டாகும் எவ்விதக் கஷ்டத்தைக் கொண்டும் வருத்தமடையாமல் அதனை உள்ளன்புடன் ஏந்து கொண்டு சதாவும் அவனைத் தேடுவதில் ஏக்கமடைந்தவனாகிவிட வேண்டும். 4வது ம∴ரிபத்தின் தொழுகை, இவை தாத்தைச் சேர்ந்ததாக விருக்கும் அதாவது நிஸ்யானுமாஸி வல்லா (ஹ்) என்பது போல் தன் கண்ணில் புலப்படும் வஸ்துக்கள்யாவும் ஹக்கல்லாதவை யென்று எண்ணி யிருப்பதை மறந்து தான் காணக் கூடியதும் தான் காண முடியாதது மான சகலமும் அவனாகவே இருக்குமென வெண்ணி அதன் படியே நடந்து வருகிறதுமாகும் உன் பார்வையில் தோற்றப்படும் வஸ்துகளை மறந்து விடுவதென்பது உனக்கு பிரமிப்பை உண்டாக்கலாம். அதற்கு உதாரணமாகச் சொல்கிறேன் உலகின் பாலை வனங்களில் பகல் பொழுதில் செல்லும் கால்நடைக்காரனின் தாகத்தால் தனிக்கெதிரில் தோன்றும்படியான கானலை நீரென யெண்ணி விரைந்து சென்று ஏமாற்ற மடைந்தபின் அவனுக்கு உணர்ச்சி ஏற்பட்டு முதலில் தோன்றியவை உண்மையில் வஸ்துவல்ல வென்பதை விளங்கிக் கொண்டதுபோல் உலகத்தில் தோற்றப்படும் வஸ்துவெல்லாம் உண்மையில் உஜூதில்லாத கானலைப் போலிருப்பதால் அவைகளை மறந்து உஜூதையுடைய ஹக்கைத் தவிர வேறில்லையென்பதை உணர்ந்து கொண்டு விறகானது நெருப்புடன் கலந்த சில நேரங்களிலெல்லாம் விறகென்ற நாமத்தை இழந்து நெறுப்பென்ற பெயரைப் பெற்றுக் கொள்வது போல் மேற்கூறிய பாதினுடைய தொழுகைகளையும் தொழுது உன் அசலியத்தளவில் சேர்ந்து கொள்வதே நீ இவ்வுலகுக்கு வந்த கருத்தாகும்.

ஓ! ஸாலிகே! முதலில் சொல்லிய ஷரீஅத்தின் தொழுகையை நிறைவேற்றி வைப்பது இரண்டு வகையாக

விருக்கிறது முதலாவது சாதாரணமாகத் தொழுகையில் பர்லு ஷரத்துகளை விட்டு விடாமல் பேணுதலாகச் செய்து முடிக்கிறது.

இரண்டாவது பாங்கின் சப்தம் உன் காதில் கேட்கும் போது உலகம், வானம், பூமி முதலிய யாவற்றையும் அழிப்பதற்காக இஜ்றாஃபீல் (அலை) அவர்களால் ஸூர் ஊதப்படுத்துவதாகவும் அதில் நீனும் அழிந்து போய் விட்டதாகவும் ஞாபகம் செய்து கொள்ள வேண்டும். தொழுகைக்காக காமத்துச் சொல்லப்படும் சப்தம் உன் செவியில் கேட்டவுடன் அழிவையடைந்த வஸ்துகளை கணக்குக் கேள்விகள் கேட்பதற்காக இரண்டாவது ஸூரைக் கொண்டு எழுப்பப்படுவதாக எண்ணிக் கொள்ள வேண்டும். தக்பீரின் சப்தத்தைக் கொண்டு நீயும் இருகரங்களையும் கட்டிக் கொண்டவுடன் உன்னை சுவாலுக்காக ஆண்டவன் முன்னிலை யில் நிறுத்தப் பட்டிருப்பதாகவும் நீ தனியாகத் தொழுதால் உன்னால் ஓதப்படும் கிராஅத்து உன் ஜவாபைத் தெரியப்படுத்துவதாகவும் இமாமுடன் தொழுது நீ வாய் மூடி இருந்தால் உன் வாய்க்கு சீல் வைக்கப்பட்டு உன் அங்கங்கள் சாக்ஷி பகர்வதாகவும் எண்ணிக் கொள்ள வேண்டும் நிலையை விட்டு ருகூஹளவில் செல்லும் போது உன் பாவத்தைக்கண்டு வெட்கமடைந்து தலை குனிவதாகவும் அதற்கு இடங்கொடாமல் மறு தடவையாக உன்னை நிறுத்துவதற்கு எழுந்திருக்கச் செய்வதாக எண்ணி சிறு நிலையிலாகியபின் மீண்டும் உன் பாபச் சுமைகளைக் கண்ணால் பார்க்க சகிக்காமல் துக்கமடைந்து நிலையிலிருக்க வியலாமல் கீழில் விழுகின்றாய் என்று ஸுஜூதில் செல்ல வேண்டும். அவ்வாறு சென்ற உன்னை மீண்டும் சுவால் செய்வதற்காக எழுப்பப் படுவதாகவும் எழுந்து நிர்க்க சத்தியற்றவனாக கீழேயே இருந்து கொள்வதாகவும் நினைத்து இருப்புக்கு வரவேண்டும். இருப்பிலிருக்கும் போதும் உன்னைக் கேட்பதாகவும் உன்னால் ஜவாபு சொல்ல வியலாமல் நீ தனியாக தரிப்பட்டிருப்பதாகவும் எண்ணிக் கொள்ள வேண்டும். ஸலாம் கொடுக்கும்போது வலது பக்கம் திரும்புகையில் சுவர்க்கவாதிகள் சுவர்க்க லோகத்துக்குச் செல்வதாகவும் இடது புரம் திரும்புகையில் நரக வாதிகள் நரகலோகத்துக்குச் செல்வதாகவும் நினைத்து உனது பாபங்களைப்

பொருத்து உன்னையும் 'சுவர்க்கலோகம் செல்லும் படியான கூட்டத்தில் சேர்த்து வைக்கும்படி ஆண்டவனிடம் கை தூக்கிப் கேட்பதாகவும் எண்ணி துஆவைக் கேட்க வேண்டும் துஆ முடிந்து வெளியில் வரும்போது உனக்கு சுவர்க்கலோகம் செல்லும்படி ஆண்டவனிடம் உத்திரவு கிடைத்து விட்டதாகவும் எண்ணிக் கொள்ள வேண்டும். இவ்விதமான நிலைமையில் உன் தொழுகையை தொழுது வருவாயானால் ஆண்டவனின் ஞாபகமே உன்னில் மிகைத்து அவனல்லாத வஸ்துகளை மறந்தவனாகவாகி அவனுடனேயே சேர்ந்து விடுவாய்.

ஓ! தாலிபே! அமலடங்கலும் நிய்யத்ளதக் கொண்டென் பதாக வந்திருப்பதால் உன்னிய்யத்துகளை நேரான பாதையளவில் ஆக்கிக்கொள். நிய்யத்தானது கப்பலைப் போலாக விருக்கும். ஏனெனில் கல்பென்ற கடலானது கங்கு கரையற்றதும் அளவிடமுடியா ஆழமானதுமாக விருப்பதால் அதன் அலைகள் வானமளாவ எழுந்து கொண்டிருக்கும். அவ்வலையினிடமாக நடத்தும் நிய்யத்தென்ற கப்பலை கவிழாமல் நடத்தாட்டுவது உன்னால் முடியாதகாரியமாகும் நான் காப்பாற்றிக் கொள்வே னென்றவர்களெல்லாம் அக்கடலிலேயே ஹலாக்கானார்கள். பித்னா பஸாது துர்க்குணம் முதலியவைகளெல்லாம் நிய்யத்தை நேராக்காத காரணத்தாலென்பதாக அருமை நாயகம் (ஸல்) அவர்கள் திருவாய் மொழிந்திருக்கிறார்கள். அக்கப்பலைக் கவிழாமல் செய்வதற்கு எவ்விதத் தந்திரத்தாலும் கமாலாலு முடியாத காரியமாதலால் அதற்கு வழியானது இரண்டாகும். முதலாவது ஓர் எஜமானின் வீட்டுக்குச் சென்றால் அவ்வீட்டில் காவலுக்காக போடப்பட்டிருக்கும் குறும்புத் தனமுள்ள க்டிநாயானது உன்னை எதிர்நோக்கி வந்தால் அதனை விட்டும் தப்பித்துக் கொள்வதற்கு ஆயுதம் தேடவேண்டும் அன்றேல் வந்தவழியே ஓட்டம் பிடிக்க வேண்டும் இவற்றில் நீ தப்பித்தாலும் தப்பிக் கொள்ளலாம், நாய் கடித்தாலும் கடிக்கலாம். இரண்டுக்கும் இடம்பாடுண்டு ஆனால் இதைவிட மேலான வழியாகிறது நாயின் எஜமானிடம் விண்ணப்பித்தால் அவன் அந்நாயை ஏதாவதொரு பழக்க வார்த்தையில் அழைத்துக் கொண்டால் உனக்கு எவ்விதத்

தீங்குமில்லை இதுவே சிறந்த வழியாகுமாப்போல் கல்புக்கு எஜமானாகிய அல்லாஹ் ஜல்லஷானஹுவத் ஆலாவின் பக்கல் அதனை அடக்கித் தரும்படி விண்ணப்பித்துக் கொண்டால் அவன் உடனே அதனை உனக்கு அடங்கி நடக்கும்படி செய்து தருவான். இரண்டாவது நாயகத்தின் ஸுன்னத்தைத் தவறவிடாமல் நடத்தி வருவதாகவிருக்கும் ஸுன்னத்தை துயர்வதென்பது உள்ளில் தோன்றக்கூடிய அல்லா(ஹ்) அல்லாத எண்ணங்களை கயிறாக்கிக் கொண்டு உலகில் உனக்குச் சொந்தமாகத் தோன்றும் செல்வங்கள் மீதும் ஸ்தாவர சொத்துக்கள் மீதும் பெண் ஜாதி பிள்ளைகுட்டிகள் மீதும் ஏற்படும் ஆசைகளை மணியைப் போலெண்ணி மேல் சொன்ன கயிறில் கோர்த்து தஸ்பீஹ் மணியைப் போல் கையில் வைத்துக் கொள்ள வேண்டும். அவைகள் உன் மனதில் சேர முடியாமல் கரங்களிலிருப்பதுபோ லிருக்கவேண்டும். ஏனெனில் இவைகளெல்லாம் உனக்குச் சொந்தமில்லாமல் இரவலாகக் கொடுக்கப் பட்டிருப்பதால் கொடுத்தவன் கேட்கும் போது அவை உன் கல்பை பாதிக்காமல் உன் கரத்திலிருந்து வெகு இலகுவாய் விலகிவிடும். இந்த இரண்டு வழியின் மீது நடந்து வருவாயாகில் உன் நிய்யத்துகள் நேரான பாதையளவில் நடப்பதற்குள்ள பழக்கத்தை அடைந்துவிடும்.

ஓ! ஸாலிகே! உனக்கு அவசியமானது திக்றாக விருக்கும் திக்ரில் ஒரு வகையை இவ்விடத்தில் குறிப்பிடுகின்றேன். திக்றானது ஏழு விதமாக விருக்கும். 1வது கண்ணுடைய திக்றானது உன்னால் முன்செய்யப்பட்ட பாபங்களை நினைத்து அழுகிறது. 2வது காதினுடைய திக்றானது கோள், புறம்பேசுதல், முதலியவைகளைக் கேட்காமலிருப்பதும், நஸீஹத்து, குர்ஆன் ஓதல் முதலியவைகளை கேட்பதுமாகவிருக்கும். 3-வது நாவின் திக்றானது வீண் வார்த்தை பொய் புறம் கோள் முதலியவைகளை விட்டும் காப்பாற்றிக் கொள்வதும் சதா இஸ்திஃபார் செய்வதும் நாயகத்திடம் வஸீலாத் தேடுவதும் அல்லாஹுத்த ஆலாவின் அஸ்மாக்களை உச்சரித்துப் புகழ்வதுமாகவிருக்கும். 4-வது கரத்தினுடைய திக்றானது பிறருக்குத் துன்பங் கொடுக்காம லிருப்பதுடன் பெரியோர்களுக்குப் பணிவிடை செய்வதும்

கொடையளிப்பதுமாக விருக்கும். 5வது உடலின் திக்றானது வீணான காரியங்களுக்குச் செல்லாமல் இபாதத்தளவில் சதாவும் முன்னோக்கியிருப்பதாக விருக்கும். 6வது கல்பின் திக்றானது, ஆலத்தில் வெளியாயிருக்கும் அஸ்மாக்களை நோட்டமிட்டு அவனின் வலுப்பங்களை உணர்வதும், அவனின் கஹ்ஹாரியத் தின் ஸிபத்தைப் பார்த்துப் பயப்படுகிறதும் அவனின் கிருபையை உணர்ந்து அதனளவில் ஆதரவு வைப்பதுமாக விருக்கும். 7-வது ரூஹின் திக்றானது, வெளிரங்கத்தில் ஆண்டவனால் விலக்கப் பட்ட காரியங்களை விட்டு விலகியிருப்பதும் அல்லாஹுத் தஆலாவின் கற்பனையாகிய சுக துக்கங்களைக் கொண்டு சிறிதளவும் மனக் கலக்கமில்லாமல் பொருத்தமாக விருக்கிறது. இவ்விதமான திக்ருகளை விட்டுவிட்டு வாயினால்மட்டிலும் சப்தமிடுவதானது வீண் கூச்சலாக விருப்பதால் அதைக் கொண்டு யாதொரு பிரயோஜனத்தையு மடையமாட்டாய்.

ஓ! அருமை தாலிபே! ஸாலிகே! ஆபிதே! அருமை நாயகம் (ஸல்) அவர்கள் தீனில் முந்தினது அல்லாஹுத்த ஆலாவை அறிந்து கொள்வதாக யிருக்குமென்று திருவாய் மொழிந்திருப்பதால் உன்மீது அல்லாஹுத்த ஆலாவை அறிந்து கொள்ள வேண்டியது கடமையாகவிருக்கும். அல்லாஹுத்த ஆலாவை எப்படி அறிவதென்றால், "மன் அர.்.ப ந.்.ப்ஸஹு .்.பகத் அர.்.ப ரப்பஹு" என்ற வாக்கியத்தின் சிர்ரை அறிந்து கொள்ள வேண்டும். அதாவது "மன் அரப என்ற வார்த்தையானது ஐந்து ஹர்புகளைக் கொண்டதாக அமைக்கப்பட்டிருப்பதால் அதன் இரகசியங்களை அறிவதாகவிருக்கும். 1-வது மீம் அதன் கருத்தாவது நாயகம் (ஸல்) அவர்கள் கூறியதுபோல் "மூதூகப்ல அன் தமூதூ" என்றதுபோல் மௌத்துக்கு முன் மௌத்தாக வேண்டும். அதாவது மௌத்தடைந்த ஒருவன் எவ்வாறு தன் பெண்சாதி பிள்ளை, செல்வம் பெருமை, ஹஸது, பொறாமை, முதலியவைகளை விட்டும் தூரப்பட்டு விட்டானோ அதேபோல நீயும் அவைகளை விட்டும் விலகியிருந்து கொள்ளவேண்டும். 2-வது நூன் இதன் கருத்தானது மையத்திற்கு நன்மையான அமலின் மீது தேட்டமிருப்பதுபோல் உனக்கும் சதாவும் நாட்டமும்

தேட்டமும் உண்டாகியிருக்க வேண்டும். 3-வது 'ஐன்' இதன் கருத்தானது ஹக்கு வேறு கல்கு வேறென்று எண்ணும் கைரியத்தென்ற வேற்றுமையை நீக்கி சதாவும் அவனளவிலேயே சேர்ந்திருப்பதாகவும் எண்ணிக் கொள்ள வேண்டும். 4-வது 'ரே' இதன் கருத்தாவது ரியாலத்தென்ற தெண்டிப்பு, நப்ஸின் இஷ்டத்துக்கு துயறாமல் அதற்கு மாற்றமாக ஷரீ அத்தின்படி சிறிதளவும் வழுவாமல் நடந்து வருவதாக விருக்கும். 5-வது 'பே' இதன் கருத்து மேல் கண்டபடி சிறிதளவும் வழுவாமல் நடந்து வந்தவனுக்கு அல்லாஹுத்த ஆலாவால் செய்யப்படும் பத்ஹாகவிருக்கும். அவ்வாறு பத்ஹடைந்தவுடன் கல்பிலுள்ள மாசுகள் நீங்கி நூரானியத்தால் நிரப்பப்பட்டு ஏக ஜோதியாய் தன்னை அறிந்து கொள்வான் அவ்வாறு தன்னை அறிந்துக் கொண்டவுடன் தன் ரப்பாகிய அல்லா (ஹ்) ஜல்லஷானஹுவத ஆலாவையும் அறிந்து கொள்வான். அல்லாஹுத்த ஆலா இவ்வாறு நடந்து நற்பலனடைந்த கூட்டத்தில் நம்மனைவோர் களையும் சேர்த்து வைப்பானாக ஆமீன், ஆமீன், யாறப்பில் ஆலமீன்.

# குறிப்பு

1927வது வருடம் மே மாதம் 12–ம் திகதியில் மௌலானா மௌலவி ஹாஜிஹாபிஸ் முஹம்மது அப்துல் கரீம் ஹளரத் (ரஹ்) அவர்களும் மெஞ்ஞான சொரூபர் ஆரீபுபில்லாஹ் ஆஷிகுர்ரஸூல், ஷைகு பதுருத்தீன், படே ஹளரத் (ரஹ்) அவர்களும், எமதூருக்கு விஜயம் தந்து இரு இரவுகளில் உபதேசம் புரிந்தார்கள். அவ்வமயம் எதிரிலிருப்பவர்களை நோக்கி "நீங்கள் எங்களின் வஃளில் நின்றும் பிரயோஜன மடைவதற்காக இவ்விடத்திற்கு வந்திருக்கிறீர்கள் ஆனால் உங்களின் ஞாபகங்களைப் பல வழியிலுமாகச் சிதறச் செய்து கொண்டிருப்பீர்களானால் எங்களில் நின்றும் யாதொரு பிரயோஜனத்தையும் அடையாதவர்களாகிவிடுவீர்கள் நாங்களிருவரும் இரண்டு வருடத்துக்குள் உங்களின் பார்வைக்கு அகப்படாதவர்களாக மறைந்து விடுவோம். அக்காலத்தில் ஏமாற்ற மடைந்து விடாமல் எங்களின் வார்த்தைகளை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுங்கள்" என்பதாக படே ஹளரத் அவர்கள் கூறியதுபோல் அது முதல் இருபத்தி மூன்றாவது நாளாகிய 1927 வருஷம் ஜூன் மாதம் 5–ம் தேதியன்று மகிமை பொருந்திய அப்துல்கரீம் ஹளரத் (ரஹ்) அவர்கள் ஆண்டவன் பக்கல் மீண்டுவிட்டார்கள், இரண்டாவதாக 1928ம் வருடம் டிசம்பர் மாதம் 8ம் தேதியன்று ஷைகு பதுருத்தீன் ஹளரத் (ரஹ்) அவர்களும் சென்னை மாநகரில் ஆண்டவன் பக்கல் மீண்டுவிட்டார்கள். (இன்னாலில்லாஹி வஇன்னா இலைஹி ராஜிஊன்) அவர்களின் சிறப்புற்ற திருமேனியை சென்னை பெரம்பூர் பிரபல வியாபாரியான ஜமால் முஹம்மது அவர்களுக்குச் சொந்தமான செம்பியம் பள்ளித் தோட்டத்தில் தபன் செய்து மக்பறாவும் கட்டப் பட்டிருக்கிறது. படே ஹளரத் அவர்களின் ஜீவிய காலத்தில் எமதூருக்கு 11 தடவை விஜயம் தந்து 17உபதேசங்கள் நிகழ்த்தியதுடன் "ரஹ்மதே ஆபாத்" என்ற காரணப் பெயரும் சூட்டினார்கள். அல்லாஹுத்த ஆலா இவ்விரு மகான்களின் துஆவைக் கொண்டு நமக்கு இரு உலகிலும் நற்கூலியளிப் பானாக. ஆமீன். ஆமீன். யாறப்பில் ஆலமீன்.

கூத்தாநல்லூர்.
10.3.1929

வாழி

கலி விருத்தம்

சீர்நபி கிளை சேர்தோழரும் வாழி
சோர்வி மாமௌலி குத்தூபா னோர்வாழி
கூர்க ரீம்சபை கூத்தா நல் லூர்வாழி
ஏர்மூ மீன்முஸ் லீங்களும் வாழியே.

ஆமீன்.

சுபம். சுபம். சுபம்.

பிஸ்மில்லா ஹிர்ரஹ்மா னிர்ரஹீம்

## 1. இறை வேட்டல்

ஸல்லல்லாஹு அலா முஹம்மத்
ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் 3 தடவை

லாயிலாஹ இல்லல்லாஹு லாயிலாஹ இல்லல்லாஹ்
லாயிலாஹ இல்லல்லாஹு முஹம்மதுர்ர ஸூலுல்லாஹ்!
3 தடவை

அகிலமெல்லாம் படைத்துக் காக்கும் புகழுக்குரிய இறைவனே
சரணடைந்தோம் சரணடைந்தோம் சர்வ உலகின் மன்னனே!
உலகுக் கெல்லாம் அருட் கொடையாம் அண்ணல் எங்கள் -
நபிகள் பால்
உந்தன் சாந்தி உந்தன் ஆசி என்றும் பொழிவாய் யாஅல்லாஹ்
(லாயிலாஹ)

உலகஞானியர் திலகம் கௌது முஹைய்யித்தீன் வலி பேரிலும்
ஞான ஜோதியாம் ஹைதராபாத் ஸூஃபி நாயகம் பேரிலும்
ஷெய்கு அப்துல் மஜீது ஸூஃபி எங்கள் முர்ஷிது பேரிலும்
உந்தன் சாந்தி உந்தன் ஆசி என்றும் பொழிவாய் யாஅல்லாஹ்
(லாயிலாஹ)

இன்றுபுதுநாள் உதயம் இறைவா, இனிய நாளாய்ச் செய்தருள்
நானும் சுற்றமும் நட்பும் வாழ்வில் உயர அருள்புரி வாயல்லாஹ்
எங்கள்ஷெய்கு அவர்கள்பொருட்டால் நாங்கள்நற்செயல் -
புரியவும்
இம்மை மறுமை இரண்டும்சிறந்து விளங்கஅருள்புரி வாயல்லாஹ்
(லாயிலாஹ)

எங்கள்வாழ்வும் எங்கள்வளமும் உந்தன் கருணை யாஅல்லாஹ்!
எங்கள்குடும்பம் மகிழந்துவாழ என்றும் வரம்தா யாஅல்லாஹ்!

உன்னை நாங்கள் பணிந்து உதவி கோருகின்றோம் யாஅல்லாஹ்!
உந்தன்சாந்தி உந்தன் ஆசி என்றும்அருள்புரி வாயல்லாஹ்
(லாயிலாஹ)

எங்கள்பிணிகள் யாவும்நீக்கி நல்ல சுகம்தா யாஅல்லாஹ்
எங்கள்தொழில்கள் பெருகிவிளங்க நிறைந்த பொருள்தா
யாஅல்லாஹ்
உன்னை நாங்கள் பணிந்து உதவி கோருகின்றோம் யாஅல்லாஹ்
உந்தன்சாந்தி உந்தன் ஆசி என்றும் அருள்புரி வாயல்லாஹ்
(லாயிலாஹ)

## 2. ஸலவாத்தின் சிறப்பு

ஸல்லல்லாஹு அலா முஹம்மது
ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் (ஸல்லல்லாஹு)

அருமை நபிமீது அன்புள்ளம் கொண்டோரே
அழகொளிர் ஸலவாத்துச் சொல்லுங்கள் - அது
இரு உலக வாழ்வுக்கும் ஈடில்லா நன்மையை
ஈட்டித்தரும் இதை நம்புங்கள் (ஸல்லல்லாஹு)

பாசநபிமீது பண்புள்ளம் கொண்டோரே
பணிவாக ஸலவாத்துச் சொல்லுங்கள் -அது
நேசத்தின் உறவினை நெருங்கிடச் செய்திடும்
நிச்சயமாய் இதை நம்புங்கள் (ஸல்லல்லாஹு)

உயிரினும் மேலான உத்தமநபி மீது
உவப்புடன் ஸலவாத்துச் சொல்லுங்கள்-அது
துய்யோனின் அருளினைப் பெற்றிட செய்திடும்
சூழ்புகழ் தீனோரே நம்புங்கள் (ஸல்லல்லாஹு)

சமத்துவ நெறிகண்ட சாந்தி நபிமீது
சாத்வீக ஸலவாத்துச் சொல்லுங்கள் -அது
கமழ்ந்திடும் உள்ளத்தில் தவ்ஹீதின் நறுமணம்
கண்ணியரே இதை நம்புங்கள் (ஸல்லல்லாஹு)

வல்லவன் வாழ்த்திடும் வள்ளல் நபிமீது
வரிசை ஸலவாத்துச் சொல்லுங்கள் -அது
நல்லவராய் நம்மை நாளும் உயர்த்திடும்
நல்லோர்களே இதை நம்புங்கள் (ஸல்லல்லாஹு)
-(கவிஞர் அம்பை அபுல்காசிம்)

## 3. அருள் கோரல்

முஹியித்தீனே! தங்கள் அருள் வேண்டி தினம் வாடியே
அன்பு பாமாலை நாம் சூட வந்தோமே (முஹியித்தீனே)

தீனின் மணி யாக வழிகாட்டும் கோனே
என்றும் எம் வாழ்க்கைப் பாதையை தெளிவாக்குவீர்
தங்கள் நாமம் கூறிடும் நெஞ்சம்
என்றும் ஞானோர் தம் ஆனந்த வழி காணுமே
தங்கள் திருநாமமே எம் திருமந்திரம் (தங்கள்)
மனம் புத்தியும் சித்தமும் சீராக்கிடும்
(முஹியத்தீனே)

என்றும் அகங்கார நிலை கொண்டு வாழும்
எங்கள் குணபேதம் நீங்கவே அருள் செய்குவீர்
சிந்தை சீர்பெற நல்வழி தாரீர்
என்றும் தௌஹீதில் இருந்திடும் நிலை கூட்டுவீர்
நித்தம் ஆசை தனில் வீழும் எ(ம்) மைக்காக்கவே (நித்தம்)
சித்தம் கனிந்திந்த ஏழைகள் முகம்பார்க்கவே
(முஹியித்தீனே)

என்றும் முவ்வாசை நிலை நீக்கவேண்டும்
நின்று நிர்மல ஞானத்தை பெற வேண்டுமே
வல்ல ரஹ்மானின் வழி பேஹும்
கௌது சமதானியே காதிர்ஜீலானியே
தங்கள் பாதம் என்றும் பணிந்தே வேண்டிடும் (தங்கள்)
இந்த அடிமைகள் நற்கதி பெற வேண்டுமே
(முஹியத்தீனே)

## 4. காத்தருள் வேண்டல்

ஹைதரா பாதொலியே காருமையா - ஐயா
கவலைகளை அகற்ற வாருமையா (ஹைதராபாத்)
ஷம்ஷிய்யா பாதினில் சற்குருவாகிய ஷம்ஷுல் ஹுதா ஒலியே
மஃஷுக்கு நாயனை மறையாமல் கண்டிடும் மெஞ்ஞான ஜோதிமெய்யே

ஏழைகள் எங்கள் முகம் பாருமையா - ஐயா
தாளினைத் தந்தெம்மை சேருமையா - ஐயா (ஹைதராபாத்)

ஆதியின் ஆசையை ஆதரவையாத அநியாயமான பாவி
ஓதி உணர்ந்து மெஞ்ஞான மறியாத உன்மத்தரான தேகி
எங்கள் கல்பின் கறளகற்ற வாருமையா - ஐயா
ஹக்குல் யக்கீனறிய தாருமையா - ஐயா (ஹைதராபாத்)

பாதமே பாக்கியம் என்றும்மை நம்பினோம் பரகதி சேர்வதற்சே
சோதனை செய்யாது சுகமது தந்திட ஏழை எம்முகம் பாரையா
ஆதம் நபியாய் வந்த ஸிர்ரை அறிய -ஐயா
பேதமை போக்கி எம்மை காருமையா -ஐயா (ஹைதராபாத்)

தானென்ற நினைவை தாத்துல் பஹ்துவில் தாயியே சேர்த்து வைக்க
பார்க்குந் திக்கெங்கும் பூரணமாகவே நூரதுவே ஜொலிக்க
ரூஹுல் குத்ஸி எனும் ஸிர்ரை அறிய - ஐயா
பூரணமாய் உதவி தாருமையா - ஐயா (ஹைதரபாத்)

ஆரிபீன்கள் நாளும் அகந்தனில் கண்டிடும் அற்புதமாய ஸிர்ரு
லா அன இல்லாஹு என்று இருந்திட்ட அனுபவமான திக்ரு
அல்லாஹ் முஹம்மது ஆதம் அறிய - அதை
அஹதுஹது வாஹிதுவில் தெரிய - ஐயா (ஹைதரபாத்)

அரும்பெரும் நாயகம் அன்புடன் விண்டதோர் அற்புதமான சொல்லு
அனமின்னூரில்லாஹ் வ குல்லு ஷையிம் மின்னூரி எனும் ஸிர்ரை அறிய
ஆலமெல்லாம் நபிகள் ஜோதி மயமே - அதை
அனுதினம் நினைப்போர்க்கு என்றும் ஜெயமே - ஐயா
(ஹைதராபாத்)

## 5. பாதம் பணிவு

பாதம் பணிந்து நின்றேன் சற்குருவின்
பாதம் பணிந்து நின்றேன்
பாதம் பணிந்து நின்றேன் சற்குருவின்
போதம் உணர்ந்து நின்றேன்.

சன்மார்க்க நெறிகளை சாலவும் கற்றாலும்
என்மார்க்கம் என்றதை பேணி நடந்தாலும்
துன்மார்க்கர் சகவாசமின்றியே வாழ்ந்தாலும்
ஞானம் பெற்றேகிட போதாதவை என்று (பாதம்)

சரியைகி ரியையோ கஞான வழிகளை
சரிகண்டு தானே எடுத்து நடந்தாலும்
புரியாத பரிபாஷை ஞானநூல் பெற்றாலும்
ஞானம் பெற்றேகிட போதாதவை என்று (பாதம்)

தஸ்பீஹ் என்பவை ஆயிரம் செய்தாலும்
திக்ரு செய்வோர் சபை சேர்ந்து இருந்தாலும்
உலகை வெறுத்து துறவறம் பூண்டாலும்
ஞானம் பெற்றேகிட போதாதவை என்று (பாதம்)

வல்லோன் கிருபையை நாளும் நினைந்திடும்
நல்லோர்கள் நாட்டங்கள் யாவும் நடந்திட
அண்மித்த பேர்களின் அல்லல் அகன்றிட
வேண்டும் முஹியித்தீன் நாளும் துதி செய்து (பாதம்)

## 6. கருணைக் கடல்

(பல்லவி)

கருணை நிறைந்திலங்கும் நாகூரா
காத்தருள் செய்ய வேண்டும் - காதிர்மீரா
நபி பேரா...

அ.ப. சரணம்

வருசை மிகுந்திலங்கும் மாணிக்கப்பூர்
வள்ளல் ஹசன் குத்தூஸ் பாலகரே
இருள் நீக்கி ஆள வேண்டும் - நாயகரே நல்
தத்துவ தீன் வளர்த்த போதகரே - (கருணை)

தாயாரின் கர்ப்பத்தில் இருக்கையிலே
தந்தையின் பிணி தன்னை தீர்த்தவரே
கைக் கண்ணாடியால் வங்கம் காத்தவரே - என்னை
கண்பார்த்து அருளும் எங்கள் தீன் சுடரே (கருணை)

சஞ்சலம் தீர எங்கள் முகம் பாருமே
ஷாஹுல் ஹமீதொலி நாயகமே
கஞ்ஜசவாய் தங்கள் பதம் தாருமே - நிதம்
நினைந்திட ஏழை எங்கள் முகம் பாருமே (கருணை)

## 7. விருத்தம்

(ஸாது ஆத்தனார்)

நித்தியமும் பக்தி மிகும் தத்துவராம்
முகையைத்தீன் நிமல பாதம்
சத்தியமா மனத்தகத்தே என்னாளும்
தகுதி பெற தவசிநித்தி
சித்திய பலத் திகழ்ந் தொளிரும் நற்றவமாய்
கூத்தன் மா நகரில் வாழும் குரு
அப்துல் மஹ்மூது ஒலியுல்லா திருத்தாழ் போற்றி

பல்லவி

அப்துல் மஹ்மூ தொலி அப்பா எப்போதும்
தப்பாது தாளடி தான் தருவார்
தயங்காதே மனமே - மயங்காதே வாழ்வில்
தவநிலை நித்தமும் தானருள்வார்

அ.ப.சரணம்

இப்புவியோர் புகழ் கூத்தாநல்லூர்
இலங்கிட அமர்ந்தார் என்னரும்பீர்
தப்பிதம்யாவையும் போக்கிடுவார் எங்கள்
தருமர் அப்துல் மஹ்மூ தொலியே (அப்துல்)

இல்மு பதினாறும் தேர்ந்தோரே
இறைவனின் வணக்கம் நிறைந்தோரே
நல்லருள் நிதமும் தருவீரே - எங்கள்
நாதர் அப்துல் மஹ்மூ தொலியே (அப்துல்)

தங்களின் கருணை வேண்டுகிறோம்
இரங்கி எமக்கருள கோருகிறோம்
எங்களின் நாட்டம் நிறைவேற்றுவீர் - எங்கள்
மன்னர் அப்துல் மஹ்மூ தொலியே (அப்துல்)

## 8. குரு புகழ்ச்சி

நாதாவின் நாமமே நாம் சேர்ந்து ஓதுவோம்
ஸூஃபீ என்றோதுவோம் .. ஸூஃபி என்றோதுவோம்
ஸூஃபீ அப்பா நாதா (நாதாவின்)

அன்னை என்றாகி எமக்கு அன்பைத் தந்தீர் (அன்னை)
தந்தை என்றாகி எமக்கு அறிவைத் தந்தீர் (தந்தை)
அன்னையும் தந்தையும் தாங்களேயாம் நாதா (நாதாவின்)

வெட்ட வெளியாகிப் போகும் மெஞ்ஞானம் தனை (வெட்ட)
வெட்ட வெளிச்சமாகக் காணும் வழியைச் சொன்னீர் (வெட்ட)
காட்டிலும் மேட்டிலும் செல்லாமல் தந்தீர் நாதா (நாதாவின்)

அகங்காரம் தன்னிலே அழித்தாளவே (அகங்காரம்)
அல்லாஹ்வின் திக்ரைச் சொல்லி தெளிவைத் தந்தீர் (அல்லாஹ்)
அல்லாஹு அக்பரின் அகமியம் தந்தீர் நாதா (நாதாவின்)

இல்மு பதினாறும் தேர்ந்தோரே
இறைவனின் வணக்கம் நிறைந்தோரே
நல்லருள் நிதமும் தருவீரே - எங்கள்
நாதர் அப்துல் மஹ்ரூ மூ தொலியே (அப்துல்)

தங்களின் கருணை வேண்டுகிறோம்
இரங்கி எமக்கருள கோருகிறோம்
எங்களின் நாட்டம் நிறைவேற்றுவீர் - எங்கள்
மன்னர் அப்துல் மஹ்றமூ தொலியே (அப்துல்)

## 8. குரு புகழ்ச்சி

நாதாவின் நாமமே நாம் சேர்ந்து ஓதுவோம்
ஸூஃபீ என்றோதுவோம் .. ஸூஃபி என்றோதுவோம்
ஸூஃபீ அப்பா நாதா (நாதாவின்)

அன்னை என்றாகி எமக்கு அன்பைத் தந்தீர் (அன்னை)
தந்தை என்றாகி எமக்கு அறிவைத் தந்தீர் (தந்தை)
அன்னையும் தந்தையும் தாங்களேயாம் நாதா (நாதாவின்)

வெட்ட வெளியாகிப் போகும் மெஞ்ஞானம் தனை (வெட்ட)
வெட்ட வெளிச்சமாகக் காணும் வழியைச் சொன்னீர் (வெட்ட)
காட்டிலும் மேட்டிலும் செல்லாமல் தந்தீர் நாதா (நாதாவின்)

அகங்காரம் தன்னிலே அழித்தாளவே (அகங்காரம்)
அல்லாஹ்வின் திக்ரைச் சொல்லி தெளிவைத் தந்தீர் (அல்லாஹ்)
அல்லாஹு அக்பரின் அகமியம் தந்தீர் நாதா (நாதாவின்)